# தாருல் இஸ்லாம்

ஆகஸ்டு 1953







DARU
ISLA

விலை 6 அ

### நீங்கள் படித்தீர்களா?

**மந்திரி மனைவி**

அந்தக் கொள்ளை அழகி ஹோட்டல் காஷியர் அவளோடு கொஞ்சிக் குலவ, அவளின் அடி பணிந்தோர் ஆயிர மாயிரவர். மசிந்தாளா அவள்? அவளின் சொகுசைத்தான் நாட்டின் ஆட்சிபீட மந்திரியாரே எடைபோட்டு வைத் திருந்தாரே? விலை 8 அணா

**வாழப் பிறந்தவள்**

'விருதை அதரதாசன்' எழுதியது

பெண்ணுரிமை கோரும் இக்காலத்திற்கேற்ப, அவளுக்கு வாழும் உரிமை கொடுத்தோம். தன்னிச்சையாகத் திரியும் பூர்ண சுதந்திர மளித்தோம்-வாழ்ந்தாளா? வகைகேட்டாள்! தூக்குக் கயிறு அவளை முத்தமிட அழைத் தது. பிறகு? விலை 12 அணா

**கதலிவளை காதலி**

'ஜெகச்சிற்பியன்' எழுதியது

காதலுக்குப் பலியான இளம் வயதினர்-ஓர் ஆண்-ஒரு பெண்-இருவரின் கோரக்கதையை விவரிக்கிறது. விலை 4 அணா

தா. இ. ஏஜண்டுகளுக்கு கமிஷன் உண்டு

தபால் செலவு பிரத்யேகம்

### குலபாயெ ராஷிதீன் வரிசை

முன்னம் நாம் கதம்பப் பதிப்பாகப் பிரசுரித் திருந்த உதுமான் (றலி) அலீ(றலி) என்னும் புஸ்தகத்தை இரண்டு தனித்தனி நூல்களா கப் பிரித்திருக்கிறோம். ஹஜ்ரத் உதுமான் (றலி) பற்றிய ச்ரித்திர நூல் கண்ணுக் கழகிய மூவர்ண ஜாக்கெட் போர்த்தப்பட்டது. வெகு உன்னதமாக அச்சிடப்பட்டது. 1-8-0

ஹஜ்ரத் அலீ(றலி)பற்றிய சரித்திரமும், அவ் வுன்னத கலீபா மொழிந்தருளிய அருமையான உபதேச மொழிகளும் ஒரே புஸ்தக மாக வெளியிடப் பட்டிருக்கின்றன. ரசூலுல்லா(ஹ்)வின் அருமை மருகராய் விளங்கிய ஹஜ்ரத் அலீ(றலி)உபதேசித்துச் சென்ற அந்நன்மொழிகள் இதுவரை தமிழில் வெளி வந்ததில்லை.

கண்ணையும் கருத்தையும் ஒருங்கே கவரும் வனப்புமிக்க மூவர்ண மேலட்டையுடனும், அழகிய பைண்டுடனும் கூடிய இந் நூலின் விலை ரூ. 2-4-0. தபால் செலவு தனி. தேவை யுள்ளோர் உடனே எமக்கெழுதவும். V. P. மூலம் அனுப்பிவைக்கிறோம்.

**ஷாஜஹான் புக் டெப்போ, சென்னை-5.**

கொழும்பில் ஓரியண்டல் நியூஸ்மார்ட்டிலும்.

பர்மாவில் சவுத் இந்தியா புக் டெப்போ

இரெங்கூனிலும் கிடைக்கும்.

தா. இ. சந்தா நேயர்களுக்கு

### ஓர் அறிவிப்பு

சந்தாதாரர்கள் தங்களுடைய வருஷ சந்தாவை முன்பணமாக அனுப்பிவைத்தால், அவர்களுக்கும் லாபமுண்டு; எமக்கும் சிரமமில்லை. ஒவ்வொரு சந்தாதாரருக்கும் எப்போது சந்தா முடிகிறதோ அப்போதே அவர்களுக்கு நாம் அறிவிப்புக் கொடுக்கிறோம். அவர்கள் உடனே தங்கள் சந்தாவைப் புதுப்பிக்கத் தவறிவிட்டால், நாம் அவர்களுக்கு V.P. மூலம் பத்திரிகையை அனுப்ப நேரிடுகிறது. இதனால் வீணே தபால் செலவு 7 அணா கூடுதலாக ஆகி, சந்தாதாரர்களுக்கு நஷ்டம் ஏற்பட்டுவந்தது. ஆனால், நம் காருண்யமிக்க அரசாங்கம் 1-4-1953 முதல் ரிஜிஸ்ட்ரேஷன், V. P. முதலிய கட்டணங்களை மிகவாகப் பெருக்கிவிட்டபடியால், இனிமேல் மேலும் கூடுதலாக வீண் நஷ்டம் ஏற்பட்டுவிடும். எனவே, நம் சமூகத்தின் நன்மையைக் கருதி நம் சந்தாதாரர்களை நாம் விநயபூர்வமாக வேண்டிக்கொள்வ தென்னவென்றால் அவரவருக்கும் சந்தா முடிவு தெரிவிக்கப்பட்டவுடனே தயவு செய்து முன்பணமாகச் சந்தா அனுப்பித் தங்கள் சந்தாவை நீடித்துக் கொள்வார்களாக; அல்லது ஒரு முக்காலணாக் கார்டு எழுதித் தங்கள் சந்தாவை நிறுத்திக்கொள்வார்களாக. நம் சமூகத்தின் சொற்ப செல்வம் தபால்-இலாகா V. P. கட்டணஸ்டாம்புகளுக்குப் பாழ்படாமல் காப்பாற்ற அன்பர்கள் முன்வருவார்களாக; சிலோன் பர்மா வாசிகள் V. P. மூலம் பெறுவதுதான் சௌகரிய வழியாகும்.

மானேஜர்,

'தாருல் இஸ்லாம்'

### தீனுல் இஸ்லாம்

( மானிடருக் கேற்ற மார்க்கம் )

இஸ்லாத்தின் உன்னத கோட்பாடுகள் பற்றிய அபூர்வமான அழகிய சிறு நூல் இது. முஸ்லிம்களும் முஸ்லிமல்லாதாரும் மிகக் குறைந்த செலவில் இஸ்லாத்தின் சகல வித மான அனுஷ்டான சித்தாந்தக் கோட்பாடு களையும் வெகு எளிதில் கற்க உதவுவது இந் நூல் ஒன்றேதான். காலஞ்சென்ற மௌ. முஹம்மதலி அவர்கள் எழுதிய ஆங்கில நூலின் மொழி பெயர்ப்பு. லார்டு ஹெட்லீயின் முகவுரையும் போட்டோப் படமும் சேர்க்கின்றன. விலை 10 அணா. தபால் செலவு தனி: சொற்பப் பிரதிகளே அச்சிடப்பட்டிருப்பதால் உடனே முந்திக் கொள்க.

எங்கள் கொழும்பு ஏஜண்டிடமும், இரெங்கூன் ஏஜெண்டிடமும், சிங்கை, பினாங்கு ஏஜண்டுகளிடமும் நேரில் பெறலாம்.

**ஷாஜஹான் புக் டெப்போ,**

460, திருவல்லிக்கேணி ஹைரோடு,

சென்னை—5.

## பொருள் அடக்கம்



## ★ அட்டைப் படம் ★

தேச சரித்திரத்தில் எப்போதாவது நடக்கும் ஒரு குறிப்பிட்ட நிகழ்ச்சி காலப் போக்கில் எதிர்பாராத பிரக்யாதியைப் பெற்றுவிடுவது வழக்கம். அஃதேபோல், சென்ற மாதம் கராச்சிக்கு நம்முடைய பிரதம மந்திரி திரு ஜவாஹிர்லால் நெஹ்ரு விஜயஞ் செய்த நிகழ்ச்சி, பாக்கிஸ்தானின் சகல மக்களையும்—ஏன், அவர்களுடைய கவர்னர் ஜெனரல் ஜனப் குலாம் முஹம்மத் அவர்களைக்கூட அளவு கடந்து மகிழச் செய்துவிட்டது. சென்ற ஆறுண்டு காலமாக இந்தியாவுக்கும் பாக்கிஸ்தானுக்கு மிடையே இருந்துவந்த பிணக்கு இப்போது வெகுவிரைவாய் மறைந்து கொண்டே வருகிறது. எனவேதான், இந்தியாவிலிருந்து வந்தவர் ஒரு பிரதம மந்திரியேதா மென்றாலும், பாக்கிஸ்தானின் கவர்னர் ஜெனரல் பாராமுகமாக இருந்துவிடாமல், அல்லது வெறும் வாயுபசாரம் புரியாமல், சிந்தை மகிழ்ந்து, பெருங் குதூகலத்துடன் நெஹ்ருவை விருந்துபசரித்துக் கண்ணியப் படுத்தினர். சாதாரணமாகவே ஜனப் குலாம் முஹம்மத் எளிய சுபாவ மிக்கவர். எனினும், அவர் சமீப காலமாகச் சிறிது நோய்வாய்ப்பட்டிருப்பதால், தம் உடல் நலிவைக் கொஞ்சமும் பொருட்படுத்தாது, தம் மாளிகையிலேயே நெஹ்ருஜீயை உல்லாசமுடன் நல்வரவேற்று மகிழ்ந்தார். பழங்கால நண்பனைக் கண்டவன் எவ்வளவு அகங்குளிர்வானே அவ்வளவு உள்ளக் குழைவுடன் பாக்கிஸ்தானின் கவர்னர் ஜெனரலும், இந்தியாவின் பிரதம மந்திரியும் சந்தித்துப் பெருந் திருப்தி யடைந்தனர். படத்தில் அவ்விருவரும் எவ்வளவு களிப்பிடை மூழ்கியிருந்தன ரென்னும் உண்மை அப்படியே பிரதிபிம்பிப்பதைப் பாருங்கள்! நெஹ்ருஜீயின் இந்தக் கராச்சி விஜயம் இனி எதிர்காலத்தில் இந்தியாவுக்கும் பாக்கிஸ்தானுக்கு மிடையே ஏற்படப் போகும் சகோதர வாஞ்சையின் முன்னோடியாக விளங்குகிறது. சென்றனவற்றை யெல்லாம் மறந்துவிட்டு, நம்மிரு நாடுகளும் நல்ல க்ஷேமத்துடன் அழகிய அபிவிருத்தியை அடைய நம் நாட்டுத் தலைவர்களும், பாக்கிஸ்தானின் தலைவர்களும் அரும்பாடு படுவரென்று ஆவலுடன் எதிர்பார்க்கிறோம். இந்திய—பாக்கிஸ்தான் நல்லுறவு நீடூழி வாழ்க! ஜெய் ஹிந்த்! பாக்கிஸ்தான் ஜிந்தாபாத்!

தாருல் இஸ்லாம்




வருட சந்தா
உள்நாடு, சிலோன் ரூ. 4-8-0
பர்மா, மலேயாவுக்கு ரூ6-0-0

DARUL ISLAM ✦ TAMIL MONTHLY ✦

# தாருல் இஸ்லாம்

ESTD - 1919

(தமிழகத்தில் மிகப் புராதன முஸ்லிம் பத்திரிகை)
நிர்வாக ஆசிரியர் : அல்ஹாஜ், பா. தாவூத்ஷா, பீ. ஏ.

மலர் 33 | ஹிஜ்ரி 1372, துல்கஃதா மீ — 1953, ஆகஸ்டு மீ | இதழ் 8


## காயிதெ அஃலமுக்குத் திரு. நெஹ்ருவின் மரியாதை

பாக்கிஸ்தானின் முதல் கவர்னர் ஜெனரலாக விளங்கிய காயிதெ அஃலம் ஜனப் முஹம்மதலீ ஜின்னு இன்று உயிருடனில்லை யெனினும், அவர் அடக்கமாகியிருக்கும் கப்ர் கராச்சி யருகே அழியாமல் நின்று கொண்டிருக்கிறது. இந்த முஸ்லிம் பெரியார் உயிருடனிருந்த காலத்தில் காங்கிரஸ் ஸ்தாபனத்துக்கே வைரியாய் விளங்கிய காரணத்தால், திரு ஜவாஹிர்லால் நெஹ்ரு உட்பட எல்லாக் காங்கிரஸ்காரர்களையுமே வன்மையுடன் எதிர்த்து வந்தார். அதிலும் சிறப்பாக, திரு காந்தியும், திரு நெஹ்ருவுமே ஜனப் ஜின்னுவின் நேரிடையான தாக்குதல்களுக்கு அதிகம் ஆளானுர்கள்: அரசியற்றுறையில்தான் அந்த எதிர்ப்பேயன்றி, தனிப்பட்ட முறையில் அவர்களெல்லாரும் ஆப்த நண்பர்களாகவே விளங்கினர்: இந்த உண்மையை உறுதிப்படுத்தவே, சென்ற மாத இறுதியில் கராச்சிக்கு விஜயஞ் செய்த நம் பிரதமர் நெஹ்ரு, 26-7-53 ஞாயிறன்று காயிதெ அஃலத்தின் கப்ருக்குச் சென்று மிக மரியாதையுடன் மாலை சூட்டினர். அப்போது எடுக்கப்பட்ட படம் இது.



DARUL ISLAM TAMIL MONTHLY
# தாருல் இஸ்லாம்
ESTD 1919

ஆகஸ்டு 1953, சென்னை - 5

## நெஹ்ரு - அலீ சந்திப்பு

ஆருண்டுகட்கு முன் இதே மாதத்தின் பதினைந்தாம் தேதியன்று நம் நாடு பூரண சுதந்தரம் பெற்றது. அதற்கு ஒரு நாள் முன்ன தாகப் பாக்கிஸ்தான் ஸ்தாபித மாயிற்று. இந்த எழுபத்திரண்டு மாதங்களுக்குள் என்னென்னவோ வின்னியாசமான விபரீதங்களெல்லாம் இவ்விரு நாடுகளுக்கிடையேயும் ஏற்பட்டு மறைந்தன. சுதந்தரம் பெறும் சமயத்திலேயே இரு நாடுகளின் எல்லை நெடுகவும் உதிரவெள்ளம் ஓடிற்று. சுதந்தரம் வந்த பின்னரோ, இந்தியாவை ஒழித்து விட வேண்டுமென்று பாக்கிஸ்தான் திட்டமிட்டிருப்பதாக நாடெங்கும் பறை சாற்றப்பட்டது. இந்தியாவிலுள்ள சில அரசியற் பேர்வழிகளும், பிற்போக்குக் கட்சித் தலைவர்களும் பாக்கிஸ்தான் சீக்கிரம் அஸ்தமித்து விடுமென்றுரர்கள்; அல்லது மீண்டும் இந்தியாவுடன் இணைந்துவிடு மென்றுரர்கள்; அல்லது பலாத்கார முயற்சிகளைப் பிரயோகித்தேனும் பாக்கிஸ்தானுட்பட இவ்வுபகண்டத்தை "அகண்ட் பாரத்" ஆக்கிவிட வேண்டு மென்றுரர்கள். பாக்கிஸ்தானிலுள்ள சில பேர்வழிகளும் பொறுப்பற்ற தனமாக, "ஜிஹாத்" முழக்கமிட்டு, இந்தியாவை வென்றுவிட வேண்டு மென்று துடித்தார்கள். இந்தப் பரஸ்பரத் தீய எண்ணம் சீக்கிரத்திலே மறைந்துபோய், இந்தியாவும் பாக்கிஸ்தானும் நெருங்கிய, அடுத்தடுத்த தோழர்களாகவும் நண்பர்களாகவும் மாறியிருக்க முடியும். ஆனால், காஷ்மீர் பிரச்சினை என்னும் பெருந் தகராறு அதே சமயத்தில் உடனெழுந்து விட்டமையால், இவ்விரு நாடுகளினிடையே ஏற்பட அனுகூலமாயிருந்த நம்பிக்கை அகன்று கொண்டே சென்று, மேலும் மேலும் பிணக்குக்களும் சிறு கலகங்களும் மூண்டு, இவற்றை எதிரெதிர்த் திக்கிலேயே நிறுத்தி, பாக்கிஸ்தானும் முன்னேற்றத்தைப் பெற்றுக்கொள்ள முடியாமல், இந்தியாவும் உன்னதத்தையடைய முடியாமல் திக்குமுக்காடச் செய்துவிட்டன.

இரு நாடுகளின் நிதியும் கோடிக் கணக்கில் ராணுவத்துக்குக் கொட்டிக் கவிழ்க்கப்பட்டது தான் மிச்சமின்றி, காஷ்மீர் பிரச்சினையும் தீர்ந்தபாடில்லை; இந்தியா-பாக்கிஸ்தான் நல்லுறவும் வேரூன்றியபாடில்லை. எனவே, 1950 ஏப்ரிலில் லியாக்கத் அலீகானும் நெஹ்ரூஜீயும் சந்தித்துத் தாற்காலிகமான ஒப்பந்தத்தை ஏற்படுத்திக் கொண்ட நல்லுறவு ஸ்திரம் பெருமலே போய்விட்டது. குற்றம் யார் மீது? என்று இப்போது ஆராய்வதால் பிரச்சினை தீரப்போவதில்லை. ஆனால், இந்த ஆருண்டுகால நிகழ்ச்சிகளுக்குப் பின்னராவது இவ்விரு நாடுகளும் சிறிது நல்ல ஞானத்தைப் பெற்று, இனி எதிர்கால சுபிக்ஷ வாழ்வுக்கு வேறு சரியான வழியைப் பின்பற்ற வேண்டுமென்று கண்டு பிடித்தனவே அதற்காக நாம் மகிழத்தான் வேண்டும்.

பாக்கிஸ்தான் ஸ்தாபிதமான அந்த 1947-ஆம் ஆண்டிலேயே நாமுட்படப் பல முஸ்லிம் பிரபலஸ்தர்களும், நடு நிலைமை வகித்தவர்களும் பாக்கிஸ்தானில் வதியும் அன்பர்கள் இந்தியாவின் க்ஷேமத்தின்மீது துவேஷங் கொள்ளவில்லை யென்றும், அவர்கள் தங்கள் நாட்டை வலுப்படுத்திக் கொள்ளவே விழைகிறார்களின்றி, நம் இந்தியாவை விழுங்க முடியாது, மாட்டார்கள் என்றும் எவ்வளவோ கதறிப் பார்த்து விட்டோம். எனினும், அப்போதிருந்த சூழ்நிலையில் எவரும் இவ்வுபதேசத்தைக் கேட்கவில்லை. உண்மையாகவே, சென்ற 1947 செப்டம்பரிலேயே இவ்விரு நாடுகளும் பரஸ்பர நல்லுறவுக்கான ஒப்பந்தமியற்றிக் கொண்டு, ஒருவர் விஷயத்தில் மற்றொருவர் வீணே தலையிடுவதில்லை யென்று வைராக்கியம் பூண்டிருந்தால், இவை யிரண்டுமே இந்த ஆறு வருடங்களுக்கிடையில் எவ்வளவோ முன்னேற்றத்தைப் பெற்றுக்கொண்டிருக்கும்; என்னென்னவோ அதிசய அற்புதங்களை நிகழ்த்திக் காட்டியிருக்க முடியும். எனினும், இப்போதாவது அந்த உண்மையை இரு நாடுகளும் உணர்ந்ததைப் பாராட்டுகிறோம்.

பாக்கிஸ்தானில் புதிய பிரதமர் பதவிக்கு வந்தார். அவர் பதவிபெற்றவுடனேயே அங்குப் பல மாறுதல்கள் நிகழ்ந்தன. அடுத்து வந்த பிரிட்டிஷ் அரசி முடிசூட்டு விழாவின் போது அந்தப் பிரதமர் முஹம்மதலீயும் நம்முடைய பிரதமர் நெஹ்ருவும் லண்டனில் சந்தித்தார்கள். அங்கே அவர்கள் சம்பாஷிக்கப் போதிய அவகாயம் இல்லாமையால், சென்ற மாதம் 25-ஆம் தேதி முதல் 27-ஆம் தேதி முடிய மூன்று தினங்கள்வரை நம் பிரதமர் நெஹ்ரூஜீ கராச்சிக்கு விஜயம் செய்து நிரம்பவும் பேச்சு வார்த்தைகள் நிகழ்த்தினர். இந்த மாதத்தின் இறுதிக்குள் முஹம்மதலீ டில்லிக்கு விஜயஞ் செய்து மீதிப் பேச்சுவார்த்தைகளை நடத்துவார் என்று அறிவிக்கப்படுகிறது. இந்தப் பேச்சுவார்த்தைகளின் முடிவாக, இந்தியா-பாக்கிஸ்தான் நல்லுறவு மிகவும் பலமான அஸ்திபாரத்தின் மீது நிலையாக நிருமிக்கப்பட்டு விடுமென்று எதிர்பார்க்கிறோம்.

நமது நெஹ்ரூஜீ பாக்கிஸ்தானின் தலைநகருக்கு விஜயஞ் செய்தபோது அவருக்கு அளிக்கப்பட்ட நல்வரவேற்புக்களின் மகத்துவத்தையும், பாக்கிஸ்தானிகள் அவரைக் கண்டதும் "நெஹ்ரூஜீ ஜிந்தாபாத்!" என்று வானமதிர முழங்கிய பெரு முழக்கத்தையும், அவரை மிக மிகக் கண்ணியமாய்ப் பாராட்டிப் பெருமைப் படுத்திய பெற்றியையும் நோக்கும்போது, பாக்கிஸ்தான் வாசிகள் நம் நாட்டின் விரோதிகளாகத் திகழ்கின்றன ரென்னும் பொய்க் கூற்றை யாரே நம்புவர்? அன்றியும், நெஹ்ரூஜீ கராச்சியை விட்டுப் புறப்படு முன்னர்ப் பத்திராதிபர்களிடையே அளித்த பேட்டியின்போது, "சந்தேகம், அச்சம் என்னும் பயங்கரமான பிடிகளில் சிக்கிக் கிடந்த நம் இரு நாடுகளுமே இப்போது மிகப் பெரும்பாலான அளவுக்கு அவற்றை ஒழித்துவிட்டன வென்பதைக் காணும்போது நான் பெருமிதங் கொள்கிறேன். இந்தப் பரஸ்பர நன்னம்பிக்கை இரு நாட்டின ரிடையேயும் ஏற்பட்டதைத் துணையாகக் கொண்டேதான் நானும் பாக்கிஸ்தானின் பிரதமரும் ஒன்றுய்க் கூடி எங்களாலான அளவுக்கு ஒற்றுமையையும் நேச மனப்பான்மையையும் ஸ்தாபிக்க முற்பட்டிருக்கிறோம். சுயராஜ்ஜியம் பெற்ற பாக்கிஸ்தானும் இந்தியாவும் கொஞ்சமும் அபிவிருத்தியைப் பெருத பிற்போக்கான நாடுகளாக இருந்துவருகின்றன. இவை தங்கள் முன்னேற்றத்துக்கான வழி வகைகளைச் செய்து கொள்ளவேண்டி யிருக்க, ஒன்று மற்றொன்றைக் கவிழ்த்துவிட்டுத் தான் மட்டும் முன்னேறவேண்டு மென்று சூழ்ச்சி செய்வது, முதிர்ந்த ஞானமில்லாதவர்களின் செயல்; முட்டாட்டனமான செயல்; சிறு பிள்ளைத்தனமான விளையாட்டுப் புத்தியாகும். இந்த 5 அல்லது 6 ஆண்டுகளாக இவை யிரண்டுமே, ஒன்றை ஒழிக்க மற்றொன்று சூழ்ச்சி செய்ததன் விளைவு யாதாயிற்றென்றுல், தன் கையாலே தன் கண்ணைக் குத்திக் கொண்ட கதையாகவே போய் முடிந்த தென்னலா ம்," என்று முழங்கினர்.

காஷ்மீர் பிரச்சினை, கால்வாய்களின் நீர்ப் பாசனம், அகதிகளின் சொத்து முதலிய ஒவ்வொரு பிரச்சினையுமே இந்திய-பாக்கிஸ்தான் பிணக்குக்கு மிக ஆழமான அஸ்திவாரத்தைப் போட்டுவிட்ட பெரும் தலைவலிதானென்றுலும், இவ்விரு நாடுகளும், தங்களுக்கிடையே யுள்ள விரோத மனப்பான்மையை வேரறுத்துவிட்டு, தூய சித்தத்துடன் முடிச்சை அவிழ்க்க முற்பட்டிருப்பதால், சுபிக்ஷத்துக்கான எதிர்காலம் வெகுதூரத்திலில்லை யென்பது தெளிவாய்ப் புலனாகவில்லையா? இத்தனை நாட்களாக, அடிப்படையே குரோதத்தின் மீதும், பரஸ்பர அவநம்பிக்கையின் மீதும் சார்ந்து நின்றமையால், எந்தப் பிரச்சினைக்கும் நல்ல மார்க்கம் பிறக்கவில்லை. ஆனால், இப்போது, அதிலும் நெஹ்ரூஜீயின் கராச்சி விஜயத்துக்குப்பால் அந்த அடிப்படையிலேயே மாறுதலேற்பட்டு, ஜின்னாவின் உபதேசமான, "நீங்களும் வாழுங்கள்; பிறரையும் வாழ விடுங்கள்!" என்னும் அரிய சித்தாந்தத்தின்மீது நல்லெண்ணம் உதயமாகி யிருப்பதால், காஷ்மீர் உள்ளிட்ட எல்லாப் பிரச்சினைகளுமே மிகக் குறுகிய காலத்துக்குள் பேராச்சரியகரமான சுமுக முடிவைப் பெற்றுக்கொண்டுவிடு மென்பதில் கிஞ்சித்தும் ஐயமில்லை.

இந்த நெஹ்ரு-முஹம்மதலீயின் சந்திப்பு எதிர்கால நல்லுறவுக்கான கதவை மிக அகலமாகத் திறந்து வைக்கு மென்று எதிர்பார்க்கிறோம்.




### இது நியாயமா?

*சென்ற மாதம் 15-ஆந்தேதி திராவிட முன்னேற்றக் கழகக்காரர்கள் திடீரென்று பிரக்யாதி பெற ஆரம்பித்து விட்டார்கள். அன்று தென்னிந்தியாவின் எல்லா ரயில்களுமே*

குறிப்பிட்ட நேரத்தில் புறப்படவுமில்லை; வந்து சேரவேண்டிய நேரத்தில் வந்து சேரவுமில்லை; காரணம், தி. மு. க. பேர்வழிகள் ரயில்களை ஓடாமல் சங்கிலியைப் பிடித்திழுத்து நிறுத்தியதாகும். டால்மியாபுரம் ரயிலடியிலும், தூத்துக்குடியிலும் கலகம் பலமாக மாறிப்போய், துப்பாக்கிப் பிரயோகம்கூட நிகழ்ந்து, சிலர் உயிரும் இழந்துவிட்டார்கள். அன்று ஏன் ரயில்களை நிறுத்தினார்கள் என்று வினவினால், முன்னொரு சமயம் திரு நெஹ்ரு தமிழர்கள் திருத்தணிக்காக நடத்தும் போராட்டத்தை "நான்ஸென்ஸ்" என்று சொன்னதை அவர் வாபஸ் பெறவேண்டும் என்பதற்காக இந்த ரயில்நிறுத்தும் உபாயம் கையாளப்பட்டதாக ஒரு சாரார் (தி. மு. க. பேர்வழிகளுள் ஒரு சிலர்) கூறுகின்றனர். ஆனால், மற்றொரு சாரார் சென்னை முதலமைச்சர் ராஜாஜீ கொணர்ந்து புகுத்தியிருக்கும் புதுமுறைக் கல்வித்திட்டத்தை எதிர்ப்பதற்கு அறிகுறியாகவே ரயில்கள் நிறுத்தப்பட்டன வென்கின்றனர். இன்னமொரு சாராரோ, வடநாட்டான் தென்னாட்டில் வந்து குடியேறித் தமிழர்களைச் சுரண்டுவதைத் திராவிடர்கள் வன்மையாக எதிர்க்கின்றனர் என்பதைப் பிரத்தியக்ஷ பூர்வமாய் நிரூபிப்பதற்காகவே ஓடுகிற ரயிலை நிறுத்தி, பிரயாணிகளுக்குப் பேருபத்திரவம் கொடுத்ததாகச் சாற்றுகின்றனர். எனவே, ரயிலை நிறுத்தக் காரணம் என்னவென்று விவரிக்கும் விஷயத்திலேயே தி. மு. கழகத்தினரிடையே மூன்று முரண்பட்ட விளக்கங்கள்! ஆனால், எந்தக் குறிப்பிட்ட ஒரே காரணத்துக்காக அத்தனை ஆயிரம் ரயில் பிரயாணிகளுக்கு இத்தனை கஷ்ட நஷ்டங்கள் உண்டுபண்ணப்பட்டன வென்பதை எம்மால் எடுத்து விளக்க இயலவில்லை.

ஓடுகிற ரயில்களின் அபாய அறிவிப்புச் சங்கிலிகளைப் பிடித்திழுத்து நிறுத்தி, பிரயாணிகளுக்குச் சொல்லொணா இடைஞ்சல்களை உண்டுபண்ணி, அவனவனும் குறிப்பிட்ட நேரத்தில் ஊர்போய்ச் சேர முடியாமல் தடுத்தது ஒருபுறமிருக்க, தூத்துக்குடி, டால்மியாபுரம் போன்ற இடங்களில் பலாத்காரமான முறையில் கன்மாரி பொழிந்து, நிரபராதிகளான பலருக்கு உடல் நஷ்டம், பொருள் நஷ்டம், மானநஷ்டம் முதலியவற்றையும் அந்தத் தி. மு. கழகக்காரர்கள் அநியாயமாகப்புரிந்துவிட்டார்கள் என்று கூறப்படுகிறது. 1942 ஆகஸ்டில் காங்கிரஸ் நிறைவேற்றிய, "வெள்ளையனே, வெளியேறு!" என்னும் தீர்மானத்தை யடுத்துக் காங்கிரஸ் 'பக்த சிகாமணிகள்' ரயில் தண்டவாளங்களைப் பேர்த்தெறிந்ததையும், பாலங்களை இடித்துத் தள்ளியதையும், தந்திக் கம்பிகளை அறுத்துப் போட்டதையும், ரிஜிஸ்ட்ரார் ஆபீஸ் ரிக்கார்டுகளைக் கொளுத்திவிட்டதையும், இன்னம் பலப்பல 'குண்டா'ப் போக்கிரிச் செயல்கள் புரிந்து பெருநஷ்டம் விளைத்ததையும் எந்தத் திராவிட முன்னேற்றக் கட்சிக்காரர்களும் அவர்களுடைய தலைவர்களும் வரம்புமீறியெல்லாம் மிக மிக வன்மையாகச் சமீபகாலம் வரையிலே கூடக் கண்டித்து எதிர்த்தார்களோ, அதே பேர்வழிகள் தூத்துக்குடியிலும் டால்மியாபுரமென்னும் கள்ளக் குடியிலும் நடந்துகொண்ட நடத்தைகளும், ரயில்வே பாதை நெடுக ரயில்களை நிறுத்திய செயல்களும் 1942 ஆகஸ்டுக்குப் பிறகு காங்கிரஸ் "தியாகிகள்" என்போர் புரிந்த 'தியாக'த்தை மிகைக்கும் "பெருந் தியாக" மாகவே எமக்குப் புலப்படுகின்றன.

ஜனநாயக ஆட்சி நடக்கும் நம் நாட்டில் சர்வாதிகார மனப்பான்மையுடன் எந்தத் தலைவராவது, மந்திரியாவது, அல்லது கட்சிப் பெரியாராவது நடந்து கொண்டால், அவரை எதிர்ப்பவர்கள் ஜனநாயக பூர்வமாக எதிர்த்து வீழ்த்தினால் மட்டுமே வெற்றி கிட்டுமன்றி, "நெஹ்ரூவும் ஆசாரியாரும் சர்வாதிகார மனப்பான்மையுடன் நடந்து கொள்கின்றனர். அவர்களை வீழ்த்த நாங்களும் தான்தோன்றித் தனமாகத்தான் நடந்து கொள்வோம்!" என்று அறைகூவுகிற தோரணையில் இப்படியெல்லாம் நடந்து மக்களிடையே அமைதியின்மையைப் பரப்புவது கிஞ்சித்தும் நியாயமாகாது என்றே நாம் கூறுவோம்.

ஆயினும், இவ்வளவெல்லாம் பெருத்த அளவுக்கு எதிர்ப்பு இருக்கும்போது, அந்த டால்மியாபுர, தூத்துக்குடி துப்பாக்கிப் பிரயோகங்களைப் பிரசார சாதனங்களாகக் கொண்டு ஈ. வே. ரா. வும் அவர் சீடர்களும் நாட்டில் அமைதியின்மையைக் கிளறிவிடும் போது, நம் முதலமைச்சர் திரு. ஆசாரியார் யாரையும் கேளாமல் தாமே தம் இஷ்டத்துக்குச் சர்வாதிகார மனப்பான்மையுடன் நுழைத்துவிட்ட நவீனமுறைக் கல்வித் திட்டத்தை ஜனநாயக முறைமைப்படி மிகவும் கௌரவமாக வாபஸ் பெறாமல், தாம் பிடித்த முயலுக்கு மூன்றே கால் என்று குதர்க்கம் புரிவது, எரிகிற நெருப்பில் எண்ணெயூற்றிய மாதிரியாக வந்து விடிகிறது. அவர் மட்டும்



சற்றுப் புத்திசாலித்தனத்துடன் இந்தத் தருணத்தில் தம் முரட்டுச் சர்வாதிகார மனப்பான்மையைக் கொஞ்சம் விட்டுக் கொடுத்தால், நாட்டிலும் அமைதி நிலவும்; துப்பாக்கிப் பிரயோகம் செய்யவும் நேராது; பார்ப்பன அக்ரஹாரங்களில் வசிப்பவர்களும் நல்ல மனநிம்மதியோடு வாழ்வார்கள். ராஜாஜீ முரட்டுத்தனமாக, முன்வைத்த காலைப் பின்வைப்பது வழக்கமில்லை. இப்போதும் அவர் அதே தோரணையில் சர்வாதிகாரியாக நீடிக்க முயல்வது, யானை தன் தலையில் மண்ணைவாரிப் போட்டுக்கொண்ட கதையாகப் போய் முடியலாம். அவர் இன்னமும் தம் பிடிவாதத்தைத் தளர்த்தாமல், தம்மிஷ்டத்துக்கு நுழைத்துவிட்ட கல்வித் திட்ட மாறுதலைத் தாங்கிப் பிடிப்பது கொஞ்சமும் நியாயமாகாது.

## கொரியா யுத்த நிறுத்தம்

மூன்று வருடங்கள், ஒருமாதம், நான்கு நாட்கள்வரை நடந்த கொரியா யுத்தம் ஒருவாறு சென்ற மாதம் 27-ஆம் தேதி நிறுத்தப்பட்டது. சிறு தீபகற்பமாகிய கொரியாவிலே இப்போது ஒன்றுமே மிச்சமில்லை; எல்லாம் வெறும் பயங்கரச் சுடுகாட்டுச் சாம்பல் மேடுகளாகவும், இன்னம் பலப்பல ஆண்டு கட்கு மக்கள் அங்கே வாழ்க்கைத் தரத்தைச் செப்பனிட்டுக்கொள்ள முடியாத குழப்ப அரங்கங்களாகவுமே காணப்படுகின்றன. இந்த யுத்தம் முதன் முதலில் வெறும் உள்நாட்டுச் சண்டையாகவே உற்பத்தியாயிற்றென்றாலும், வெகு சீக்கிரத்தில் இது சர்வலோகப் பெரும் யுத்தமாக வலுத்து, ஐ. நா. ஸ்தாபனமே யுத்தத்தில் குதிக்கவேண்டி வந்துவிட்டது. ஐ. நா. கக்ஷிக்கு 70,000 ஆட்சேதமும், 80,000 பேர் காணாமலும், அல்லது எதிரிகளிடம் சிக்கியும், 2,50,000 பேர் படுகாயமடைந்தும் நஷ்டமேற்பட்டு விட்டது. கம்யூனிஸ்ட்களுக்கோ சுமார் 15,00,000 சேதமென்று தெரியவருகிறது. இவையல்லாமல், கொரியா வாசிகளுள் 4 லக்ஷம் பிரஜைகள் கொல்லப்பட்டனர்; மீதியிருப்பவர்களுள் காற்பங்குக்கு மேற்பட்டவர்களுக்கு வீடுகள் அழிந்துவிட்டன. உணவின்மை காரணமாகக் கொடிய பஞ்சம் தலைவிரித்துத் தாண்டவமாடுகிறது. பொருள் நஷ்டமும், உயிர் நஷ்டமும் இப்படியிருக்க, இரு கக்ஷியினரும் எவ்வளவு பணத்தை அத் தீபகற்கத்தில் புகைத்துப் பொசுக்கின ரென்னும் விவரம் இனி வெளிவரலாம்.

இத்தனை விபரீதங்கட்குப் பின்னர் இந்த யுத்த நிறுத்தம் ஏற்பட்டிருக்கிறது. இதை யடுத்து அமெரிக்க தலைவர்களும், தென் கொரிய தலைவர் டாக்டர் ரீயும் கண்ணியமான முறையில் சமாதான ஒப்பந்தத்தைக் கம்யூனிஸ்ட்களுடன் ஏற்படுத்திக் கொள்வதுதான் விவேகமாகும். அதை விடுத்து, மேலும் மேலும் உபத்திரவத்துக்கான பிரச்சினைகளை உற்பத்திசெய்து கொள்வதால், கொரியாவுக்கோ, உலகத்துக்கோ, ஐ. நா. ஸ்தாபனத்துக்கோ எத்தகைய நற்பயனும் விளையப் போவதில்லை. இந்தக் கொரியா யுத்தத்தின் காரணமாகத்தான் ஆசியா கண்டத்தில் மட்டுமின்றி, உலகின் எல்லாக் கண்டங்களிலுமே மக்களின் வாழ்க்கையும், பொருளாதார நிலைமையும் சீர்கெட்டுக் கிடக்கின்றன. இந்த யுத்த நிறுத்தத்தை யடுத்து நிரந்தர சமாதானம் நிலைநிறுத்தப்பட்டால், உலக மக்கள் உய்வார்கள்; எங்கும் அமைதியும் பொருளாதார சுபிக்ஷமும் ஏற்படும்.

## முஸ்லிம் லீக் கட்சி ஒழியுமா?

சென்ற பொதுத் தேர்தலின்போது காங்கிரஸ்அங்கத்தினர்களை எதிர்த்துச் சென்னை முஸ்லிம் லீக் அபேட்சகர்களை நிறுத்திய போது, சட்டசபையிலே காங்கிரஸ்கட்சி மிருக பலம் பெற்றுத் தான்தோன்றித்தனமாக எதையும் சட்டமாக்கிக் கொள்வதைத் தடுக்கவே தேர்தலில் போட்டியிடுவதாகக் கூறப்பட்டது. ஆனால், சென்ற 29—7—53 அன்று சென்னைச் சட்ட சபையிலுள்ள முஸ்லிம் லீக் அங்கத்தினர்கள் காங்கிரஸ் காரர்களுக்கும் திரு. ராஜகோபாலாச்சாரியாருக்கும், "தாசானுதாசர்க"ளாக இருந்துபோய், நம் ராஜ்ய மக்களைக் காட்டிக்கொடுத்த செயலைப் பார்க்கும்போது, இப்படிக் காங்கிரசுக்குத் தாளம் போடும் முஸ்லிம்லீக் கட்சி என்னும் உதவாக்கரைப் பேர்வழிகளுக்கு நாம் நம் ஒத்துழைப்பை எப்படி நீடிக்க முடியும்?

ராஜாஜீ கொண்டுவந்திருக்கும் நவீனக் கல்வித் திட்டமென்னும் உருப்படாத பிற்போக்குத் திட்டத்தை அவரும், அவரினத்தைச் சார்ந்த சிலரும், சில காங்கிரஸ்காரர்களும் மட்டுமே ஆதரிக்கின்றனரின்றி, நாட்டிலுள்ள மக்களுள் 100-க்கு 90 பேருக்கு மேல் வரை எல்லாக் கட்சியைச் சார்ந்த, எல்லா இனத்தைச் சார்ந்த, எல்லா வகுப்பைச் சார்ந்த எல்லாத் தரத்தைச் சார்ந்த சகல பேர்வழிகளுமே எதிர்க்கின்றனர். மிகவும் அடக்கமான

சுபாவமுள்ள சென்னை "ஹிந்து" பத்திரிகை முதல் அனேகமாக எல்லாப் பத்திரிகை களுமே இவ்வுருப்படாத திட்டத்தை வன்மை யுடன் தாக்குகின்றன. மக்களிடையே இது சம்பந்தமாகப் பெருங் கொந்தளிப்பு எழுந்தி ருக்கிறது. இப்படிப்பட்ட வேளையிலே அந்த ஆச்சாரியாரின் திட்டத்தைக் குழிதோண்டிப் புதைப்பதற்காகச் சென்ற மாத இறுதியில் (29-ஆம் தேதி) ஒரு தீர்மானம் எதிர்க்கட்சிக் காரர்களால் கொண்டுவரப்பட்டது. "இந்திய யூனியன் முஸ்லிம் லீக்" என்று அர்த்தமில் லாத அகம்பாவம் பாராட்டும் இந்தக் கட்டெ றும்புக் கட்சி கொஞ்சமாவது முன்யோசனை கொண்டதா யிருந்திருப்பின், கண்ணியமான முறையில் ஒத்துழைத்து, எதிர்க்கட்சியைப் பலப்படுத்தி, காங்கிரஸ் கட்சியைப் படு தோல்வியடையச் செய்திருக்க வேண்டும். ஆனால், என்ன நடந்தது? ராஜாஜியின் புது முறைக் கல்வித் திட்டத்தை உடனேஒழித்து விடவேண்டுமென்று எதிர்க்கட்சி கொணர்ந்த தீர்மானத்துக்கு, அப்போது சட்ட சபையி லிருந்த 126 காங்கிரஸ் அங்கத்தினர்களும் எதிராக ஓட்டுப் போட்டார்கள். மக்களிடம் வாக்குப் பெற்று அவர்களுக்கே எதிரியாய்ப் போன திரு மாணிக்க வேலு நாயக்கர் என் னும் நிதி மந்திரியும் அவருடைய கட்சியான காமன்வீல் கட்சியின் மற்றும் 4 அங்கத்தி னர்களும், இரண்டு சுயேச்சை யங்கத்தினர்க ளும், ஒரு பிரஜா சோஷலிஸ்ட் கட்சியங்கத்தி னரும் சேர்ந்து, மொத்தம் 134 பேர்கள் ராஜா ஜீயைத் தூக்கிப் பிடித்தார்கள். ஆனால், "நம் முடைய" முஸ்லிம் லீக் அங்கத்தினர் 4 பேர் களும் திடீரென்று ராஜாஜீ மீது கொண்டு விட்ட அபிமான ஆர்வத்தால், மக்களின் பிரதிநிதிகள் தாங்கள் என்பதையும் மறந்து, தங்கள் 4 ஓட்டுகளையும் அந்த 134 ஓட்டுக்க ளுடன் சேர்த்து 138 ஆக வழங்கினர்கள்.

ராஜாஜீ திட்டம் ஒழிய வேண்டு மென்ப தற்குச் சாதகமாகவும் 138 ஓட்டுகளே கிடை த்தன. எனவே, சபாநாயகர் தம்முடைய ஓட்டை காங்கிரஸ் சார்பாக வழங்கி, தீர்மானத்தைத் தோல்வியுறச் செய்துவிட்டார். இந்த மாதிரி மக்களின் கண்ணியத்தைக் காற்றில் பறக்க விட்டு, காங்கிரஸைக் "காதலித்த" முஸ்லிம் லீக் கட்சி அடியோடு ஒழியுமா?

நல்ல வேளையாக, எதிர்க்கட்சி கொணர்ந்த மற்றொரு தீர்மானம்—ஆச்சாரியாரின் நவீன முறைக் கல்வித் திட்டம் ஒற்றிவைக்கப்பட வேண்டும்; அதை உத்தியோகப் பற்றுள்ள, உத்தியோகப் பற்றற்ற மேதாவிகள் நன்கு பரிசீலித்தே மக்களுக்கு ஸிபாரிஷ் செய்ய வேண்டும் என்னும் மாற்றுத் தீர்மானம் இரண்டே ஓட்டு வித்தியாசத்துடன் நிறை வேற்றப்பட்டது. இந்த மாற்றுத் தீர்மானத் துக்கும் முஸ்லிம் லீக் கட்சியின் 4 ஓட்டுகளும் பாதகமாகவே வழங்கப்பட்டன வென்பதை நினைக்கும்போது எமது வயிறு குமுறுகிறது.

காலஞ்சென்ற காயிதெ அஃலம் தலைமை வகித்த முஸ்லிம் லீகின் கண்ணியமும், பெரு மையும், கீர்த்தியும் பாக்கிஸ்தான் ஸ்தாபித மானதோடு அழிந்துபட்டன. பிறகு அவர் பெயரையும், அவருடைய ஸ்தாபனத்தின் பெயரையும் அலங்காரமாகத் தங்கள் தலைமீது சிலர் சுயமே பொருத்திக் கொண்டு, அதற்கு "இந்திய யூனியன் முஸ்லிம் லீக்" என்று பெயர் சூட்டிக்கொண்டு, "சட்டசபை லீக் கட்சி" என்று பெருமையாக அழைத்துக் கொண்டு, காங்கிரஸ் அங்கத்தினர்களுக்கு அடிவருடுவதும், சமயத்தில் மக்களைக் கால் வாரி விடுவதும், தக்க தருணத்தில் இப்படிப் பெரும் பல்டியடிப்பதும், காயிதெ அஃலத் தின் ஆவிக்கு மட்டுமின்றி, நம்மெல்லோரின் மனத்துக்குமே பேரிடியைத்தான் உண்டு பண்ணுகின்றன வென்பதில் ஐயமுண்டோ?

சென்னைச் சட்டசபையிலுள்ள முஸ்லிம் லீக் பேர்வழிகளுங்கூடத் தம்முடைய கைப் பொம்மைகளே என்பதை ராஜாஜீ நன்குணர் ந்து கொண்டு விட்டமையாலே, மறுநாள் 30-ஆம் தேதி சட்டசபையில் ஜம்பமாக வந்த மர்ந்து, தம்மையும் தம் சகாக்களையும் கவிழ்ப்ப தென்பது ஆராலுமாகாது என்ற அகம் பாவம் கொண்ட தோரணையில், முதல் நாள் சட்டசபை எதிர்க்கட்சி நிறைவேற்றிய தீர் மானத்தின் முக்கியப் பகுதியாகிய "கல்வித் திட்டம் ஒற்றி வைக்கப் படவேண்டும்" என் னும் அசெம்பிளிக் கட்டளையைக் காலால் உதைத்துத் தள்ளிவிட்டார். ராஜாஜீயை மேலும் சர்வாதிகாரியாக்கிவிட்ட முழுப் பொறுப்பும் சென்னைச் சட்டசபை முஸ்லிம் லீகினரின் தலைமீதே வந்துவிடுகிறது. இந்த மாதிரியான விபரீதப் போக்கை நாம் வன்மை யுடன் கண்டிக்கிறோம்.

இந்த உருவில்லாத, காங்கிரஸ் அடிமை யான, சென்னை முஸ்லிம்லீக் கட்சி அடியோடு ஒழியுமா?






[உரிமை யாவும் ஆசிரியருக்குச் சொந்தம்]



## அத்தியாயம்—30

### இறுதிஜயூபியின் இறுதிக் காலம் (தொடர்)

"என் காதற்கிளியே! உன் யோசனையை நான் என்னென்பேன்! தொலைந்தான், அந்த ஐயூபி,-தொலைந்தான், அந்த மூஸா!" என்று முஃஜுத்தின் பேயாட்டம் ஆடினர்.

ஷஜருத்துர் முஃஜுத்தீனின் பிடியினின்று தம்மை விடுவித்துக் கொண்டு, தூரவிலகி நின்றார்.

"இதற்குள் ஏன் குதித்துக் கூத்தடிக்கிறீர் கள்? மூஸா இதில் தன் கையெழுத்தைப் போட்ட பிறகல்லவோ நாம் நிஜமாகக் குதிக்க வேண்டும்?" என்று ஷஜருத்துர் கடுகடுப் புடனே கத்தினர்.

"அவன் எப்படிக் கையொப்ப மிடாமற் போக முடியும்? எனக்குத் தெரியும், அவனை எப்படிப் போடச் செய்வ தென்பது. இப் போது இதில் அவன் கையொப்பமிட்டுவிட்ட தாகவேதான் அர்த்தம்."

"அர்த்தமும் வேண்டாம்; மண்ணுங்கட்டி யும் வேண்டாம். அவன் போட்டு முடிக்கிற வரையில் பொறுமையா யிருப்போமே! ஏன் உங்களுக்கிந்த அவசர புத்தியோ?"

"நீயாவது ஒரு பிரேதத்தை வைத்துக் கொண்டு காத்துக் காத்துக் கிடந்து பொறு மையின் சிகரத்தை எட்டிப் பிடித்திருக்கிறாய். எனக்கு எங்கே அந்தமாதிரியான பொறுமை வரப் போகிறது?"

"ஓஹோ! நீங்களும் ஒரு பிரேதத்தை வைத்துக் கொண்டு அழவேண்டு மென்கிறீர் களோ? இதற்கென்ன பிரமாதம்? உலகத்தில் பிரேதங்களுக்காக பஞ்சம்? நீங்கள் கட்டளை யிட்டால், நாளையே நூற்றுக் கணக்கான பிரே தங்களை இவ் வரண்மனைக்குள் வரவழைத்து விடுகிறீர்கள்!"

"பிரேதங்களா? ஏன், எதற்காக?"

"நீங்கள் கட்டிக் கொண்டு அழுவதற்குத் தான்!"

"நான் ஏன் நூறு பிணங்களைக் கட்டிக் கொண்டு அழ வேண்டும்?"

"நீங்கள் சற்றுமுன் சொன்னீர்களே! ஒரு பிரேதத்தை வைத்துக்கொண்டு நான் அழுத படியால்தான் சிறந்த பொறுமைசாலியாயிருக்கிறேனென்று! தாங்கள் நூறு பிரேதத்தை வைத்து அழுதாவது அத்தகைய பொறுமைசாலியாகப் போகக்கூடாதா வென்பதற்காகத்தான் சொன்னேன்...பரிகாசமெல்லாம் இருக்கட்டும்! விஷயத்துக்கு வருவோம்: மலிக்குல் அஷ்ரப் என்னும் தங்களுடைய போட்டி மன்னனிடம் இக்கடிதத்தில் கையொப்பம் வாங்கிவிட முடியுமல்லவா?—முடியாதென்றால், இப்போதே சொல்லிவிடுங்கள்!"

"ஷஜருத்துர்! நீ என்னை ஆண் சிங்கமென்று அறியவில்லை போலும்! அமீருல் மூமினீனேகூட என்னைக் கண்டால் கொஞ்சம் யோசிக்கிறானென்றால், என் சக்தி என்ன, லேசுபட்டதென்று நீ மதித்து விட்டாய்? இங்கே அந்தப்புரத்தில் மென்மையான உன்னிடம் வன்மையான என் சக்திகளைக் காட்டினால், நீ பயந்துவிடுவாய் என்பதற்காக நான் மிக அடக்கமாயிருக்கிறேன். நீ என்னவோ என்னை ஓடவோட விரட்டுகிறாய். நான் செய்து காட்டப்போகும் வீரமிக்க தீர பராக்கிரமச் செயல்களைக் கண்டு நீயே மெச்சிப் புகழப் போகிறாய்!"

"அடே! ஆண் சிங்கமே! இவ்வளவு வீரம் இருக்கிறதா? என்ன இருந்தாலும் எனக்கு அத்தாபேக்குல் அஸ்கிர்ராக விளங்கிய சிங்கக் குட்டியல்லவா தாங்கள்! நான் அதை மறந்து போனேன். போகட்டும். அதிசாமர்த்தியமாக இரண்டொரு தினங்களில் அக்கையொப்பத்தைப் பெற்று விடுங்கள்!"

"இரண்டொரு தினங்களென்ன? நாளைக்கே பெற்றுவிடுகிறேன்!"

ஷஜருத்துர் மீண்டும் அந்தக் கடிதத்தையெடுத்துப் படித்துப் பார்த்தார். திருப்திகரமாகத் தலையை யசைத்துக் கொண்டே, "ஆம்! இது நிச்சயமாக மூஸாவின் சாவோலையேதான். இதில்மட்டும் நாம் வெற்றியுடனே மீண்டுவிடுவோமாயின், நம்முடைய ஸல்தனத்தை நாம்மட்டுமே அடையப் பெறலாம். ஒண்டவந்தவனை ஒழித்துக் கட்டிவிடலாம்!" என்று முணுமுணுத்துக் கொண்டே தம்மரவணைமீது தாவியேறிப் படுத்துறங்கி விட்டார்.

மறுநாள் பொழுது புலர்ந்து அரசவை கூடியதும், வழக்கம் போலவே சுல்தான்கள் இருவரும் இரு சிம்மாசனங்களில் அமர்ந்துகொண்டார்கள். அன்று கவனிக்கவேண்டிய விஷயங்கள் பல இருந்தன. சென்ற பல மாதங்களாகவே அவ்விருவரும் திமஷ்கில் பொழுது போக்கிவிட்டபடியால், இங்கே கையொப்பமிடவேண்டிய தஸ்தாவீஜ்கள் போர்போலக் குவிந்திருந்தன. மலிக்குல் அஷ்ரப்ஜூபி அவசரமாக எல்லாவற்றையும் ஒவ்வொன்றாய் எடுத்துக் கையொப்பமிட்டு முடித்தார். ஒவ்வொன்றையும் படித்துப்பார்த்துக் கையொப்ப மிடுவதென்றால், அது நடக்கிற காரியமா? பறக்கிற பரியின் வேகத்தில் அவர்பிடித்திருந்தநாணற் பேனா கிடுகிடுவென்று கையொப்பங்களைக் கிறுக்கித்தள்ளிக்கொண்டேயிருந்தது. எனவே, ஷஜருத்துர் சென்ற இரவு தம் கணவர் மூலம் செய்தனுப்பியிருந்த பொறிக்குள்ளே ஏமாந்த ஐயூபிச் சிறுவர் தெரியாத்தனமாய் வலியப்புகுந்து மாட்டிக்கொண்டு விட்டார். என்னெனின், அவர் கையொப்பமிடவேண்டிய பெரிய பெரிய தஸ்தாவீஜ்களின் மத்தியிலே முஇஜ்ஜுத்தீன் ஐப்க் முற்குறிப்பிட்ட பொய்க்கடிதத்தையும் வெகு தந்திரமாகப் புகுத்திவைத் திருந்தமையாலும், கையெழுத்துப் போடுகிற அவருடனே அடிக்கடி பேச்சுக் கொடுத்துக்கொண்டிருந்தமையாலும் அந்த இளைய சுல்தான் பேனாப்போன போக்கில் அக்கடிதத்திலும் தம் கையொப்பத்தை யிட்டுவிட்டார்.

அன்றுமாலை அரசவை கலைந்ததும், முஇஜ்ஜுத்தீன் எவ்வளவு விரைவாகவும், பொறுமையிழந்தவராகவும் ஷஜருத்துர்ரிடம் ஓடோடிச் சென்று அக் கடிதத்தை நீட்டிவிட்டு, நெஞ்சைத் தூக்கி நிமிர்ந்து நின்றாரென்று நாம் வருணிக்கத் தேவையில்லை. ஸிக்கந்தர் பாதுஷா இந்தியாவில் பெற்ற இறுதி வெற்றியின் போது நின்றதைப்போல் இவர் நின்றார்! உலகத்தையே ஜெயித்துவிட்டதாக எண்ணிக்கொண்டுவிட்டார், ஷஜருத்துர்ரின் கைப்பொம்மையான சுல்தான் முஇஜ்ஜுத்தீன்.

ஷஜருத்துர் நிதானமாக அக்கடிதத்தைக் கூர்ந்து நோக்கினார். அதிலுள்ள கையொப்பத்தைக் கண்ணுற்றதும் கீழுதட்டால் மேலுதட்டையழுத்திக்கொண்டு விஷமத்தனமாகக் கண்சிமிட்டினார். "தொலைந்தான்!" என்னும் வார்த்தைமட்டும் அவர் வாயினின்று பிறந்தது;

"என்ன, நான் சொன்னதைச் சாதித்து விட்டேனல்லவா? இப்போது என்ன செய்ய வேண்டும்?" என்று ஆவல் மிகுதியால் கடாவினார் முஇஜ்ஜுத்தீன்.

"ஏன், இன்று நள்ளிரவில் அவனைத் தூக்கத்தில் சிறைசெய்து, லூயீ அடைபட்டிருந்த சிறையறைக்குள்ளே அடைத்துவைக்க வேண்டியதுதான். பிறகு சாவகாசமாக ஒரு நாளன்று அவனை அவன் முன்னோர்கள் சென்றிருக்கிற அத் திரும்பா உலகத்துக்கு அனுப்பிவைக்கவேண்டியதுதான்!"

"அப்படியானால் இந்தக் கடிதம்?"

"இது நாம் எடுக்கிற நடவடிக்கைகளுக்குச் சாக்ஷி பகர்கிறது. நாளைக்கு அரசவை கூட்டப்பட்டவுடனே மற்றொரு சுல்தானைக் காணோமே என்று தேடுகிறவர்களிடம் இக்கடிதத்தைப் படித்துக் காட்டினால், தாமாகவே விஷயத்தைப் புரிந்துகொள்கிறார்கள்!"

"என் மனம் வேதனைப் படுகிறதே?..."

"வேதனையாவது, சுண்டைக்கா யாவது! ராஜீய விஷயங்களிலும் காதல் விஷயங்களிலும் செய்யப்படுகிற எல்லாச் செயல்களும் சட்டபூர்வமாய் நியாயமானவையே என்னும் அற்ப விஷயத்தைக்கூடத்தெரிந்துகொள்ளாமல் நீங்கள் சுல்தானாக இருக்கிற லக்ஷணத்தைப் பார்த்தால், எனக்குச் சிரிப்பு வருகிறது."

"இல்லை, கண்மணி! நாம் எடுத்த, அல்லது இனி எடுக்கப்போகிற நடவடிக்கைகளைக் குறித்து என்மனம்வேதனைப்படுகிறதுஎன்று நான் சொல்லவரவில்லை...ஆனால், நாம் திருட்டுத்தனமாய்க் கையொப்பம் பெற்ற இப் பொய்க் கடிதத்தை வைத்துக்கொண்டு கடைசிவரை எப்படிச் சமாளிக்கப் போகிறேனென்றுதான் புலப்பட வில்லை..."

ஷஜருத்துர்ருக்குக் கோபமும் ஆத்திரமும் கனன்றெழுந்தன. கணவரை அக் கோபஞ் சிந்தும் கண்களுடனே ஒரு முறைப்பு முறைத்துப் பார்த்தார். அப்பார்வை முஇஜ்ஜுத்தீனுடைய உச்சந்தலை முதல் உள்ளங்கால்வரை பனிக்கட்டியால் உறையச் செய்வதுபோன்ற பொல்லாத பயங்கரவுணர்ச்சியை ஊட்டிவிட்டது. ஷஜருத்துர்ரின் கோபத்தைக் காணச் சகிக்காமல் கண்களைக் கீழே கவிழ்த்துக் கொண்டார். ஷஜருத்துர்ரோ, தம் உதடுகளை இறுக மடித்துக்கொண்டு பாம்பு சீறுவது போல் நாசித்துவாரங்கள்வழியேமூச்சை ஊதினார்.

"பேஷ்! ஆண்சிங்கமே! நன்றாய்ச் சொன்னீர்கள்! இந்தப் பொய்க் கடிதத்தை வைத்துக்கொண்டு, பாவம், நீங்கள் எப்படிச் சமாளிப்பீர்கள்? சைசை! எனக்கு அவமானமாயிருக்கிறது. உங்களுக்குத் தைரியமில்லாவிட்டால், இப்போதே சொல்லிவிடுங்கள். நான் வேறு திட்டம் வகுக்கிறேன். நட்டாற்றிற் கைநழுவவிட்டாற்போல் பாதியில் வந்து விஷயத்தைக் கெடுத்துக் குட்டிச் சுவராக்கிவிடப் போகிறீர்கள்!"

"இல்லை...நான்...என்னால் சாதிக்க முடியாது என்று கூறவரவில்லை, ஆனால், பொய் என்றைக்கும் பொய்யாகத்தானே போய்முடியும்? சத்தியந்தானே இறுதியில் ஜயம் பெறும். அதற்காகவே சொல்ல வந்தேன்...", என்று இழுத்தாற்போல் இயம்பினார் முஇஜ்.

ஷஜருத்துர் இதுகேட்டு அதிகமும் கோபங்கொண்டு விட்டார். பற்களை நறநறவென்று மென்றுகொண்டே, "எது சத்தியம்? உங்கள் தூங்குமூஞ்சி கலீபா மற்றொரு தூங்குமூஞ்சியைத் தேடிப்பார்த்து சுல்தானாக நியமிப்பதா சத்தியம்? அத்தூங்குமூஞ்சியை உடன்வைத்துக்கொண்டு இறுதிவரை நாமும் தூங்கிக்கொண்டிருப்பதா சத்தியம்? ஆட்சிசெலுத்த ஆண்மையில்லாத ஐயூபிச் சிறுவனை நாம் இவ்வரியாசனத்தில் வைத்துப் பார்த்துக்கொண்டேயிருப்பதா சத்தியம்? என் உடல், பொருள், ஆவி அனைத்தையும் அடியோடு தியாகம்புரிந்து வெகுமதியாய்ப்பெற்ற இந்த ராஜ்யத்தை என்னிடமிருந்து அநியாயமாய்ப் பிடுங்குவதற்காக அந்தக் கையாலாகாத கலீபா செய்த சதித்திட்டமா சத்தியம்? இல்லை, இவ்வளவுக்கும் மேலாக எட்டாவது சிலுவை யுத்தத்தின் போது நான் ஈசல்றய்ப்பறந்து, விளக்கில் வீழ்ந்து, என் உடம்பையும் மானத்தையும் காப்பாற்றிக்கொண்டதற்குக் கைம்மாறாக என்னை முகத்திற் கரிபூசிவிட்ட பர்ஜீகளின் பொய்ம்மையா சத்தியம்? காலஞ்சென்ற கணவரின் உடலைக் கண்ணெதிரில் வைத்துக்கொண்டு கனிந்துருகிக் கதறியழுததற்குக் கூலியாக அந்த முஸ்தஃஸிம் பில்லாஹ் என்னும் லஃனத்துல்லாஹ் அனுப்பிய தாக்கீதா சத்தியம்?—ஏ சுல்தான்! என் வயிறு எரிகிறது; என் உடல் துடிக்கிறது. அந்த என் ஜென்ம வைரியாகிய கலீபாவின்

மீது என்னால் பழிவாங்கிக்கொள்ள முடியா மற்போயினும், அந்த கலீபா நியமித்தனுப்பிய இளஞ்சிறுவன்மீதாவது என் பழிக்குப் பழியை வாங்கிக்கொள்ளாமற் போயின், நானும் ஷஜருத்துர்ரா?" என்று கர்ஜிக்கத் துவக்கினர். மூஸஜுத்தீனின் முகத்தில் ஈயாடவில்லை!

வறண்டுபோன தொண்டையை ஷஜருத்துர் வாயிலூறிய எச்சிலால் சிறிது நனைத்துக்கொண்டார்.

"என் கணவரே! இது சத்தியம்! என்னை வெளியேறச் செய்துவிட்டு என்னுடைய ஆசனத்தில் எவனை என் எதிரிகள் அமர்த்திவிட்டு, அவனை சுல்தானென்று கூறி ஆர்ப்பரித்துச் சுப சோபனம் பாடினர்களோ, அவனை நான் இருக்கிற இடம் தெரியாமல் ஒழித்துவிட்டு, அதே ஸ்தானத்தில் அமர்ந்து, சுல்தானு ஷஜருத்துர் என்று அவ்வெதிரிகளின் வாயாலேயே அழைக்கப் படாமற்போயின், நான் என் உடைமையெல்லாம் களைந்து பரதேசியாக மாறி, கையிலே கப்பரையை ஏந்திக்கொண்டு இம் மிஸ்ர் தேசத்தைவிட்டே ஒழிந்துபோகக்கடவேன்! துருக்கி ரத்தம் ஓடுகிற என் உடலின் ஒவ்வோர் அவயவத்தையும் நானே துண்டுதுண்டாக வெட்டி யெறிவேன்! நீங்கள் சத்திய மென்று கூறுவது நிஜமான சத்தியமா, அல்லது நான் சத்தியமென்று கூறி, இது வரை தீரத்தெளிய ஆராய்ந்துசெய்த ராஜ தந்திர யுக்திமிக்க தந்திர சக்தி நிஜமான சத்தியமா வென்பதை உலகுக்கு நிரூபித்து விடுகிறேன். நீங்கள் சற்று முன்னர்க் கூறினீர்கள்; இந்தப் போலிக் கடிதத்தை வைத்துக்கொண்டு நாம் எப்படி வெற்றிபெற முடியுமென்று! நீங்களே சிந்தித்துச் சீர் தூக்கிப் பாருங்கள்; மிஸ்ரைச் சுற்றிலும் ஐரோப்பிய நாட்டு அநாகரிகக் காட்டுமிராண்டிகள் நெருப்பை மூட்டிக்கொண்டு, அத்தகனச் செயல்களைச் "சிலுவை யுத்தம்" என்று நெஞ்சமஞ்சாமல் பிதற்றிக் கொண்டிருந்ததை யெல்லாம் பேடித்தனமாய் மூலையில் குந்திப் பார்த்துக்கொண்டே யிருந்த உங்கள் அமீருல் மூமினீன், போலியினும் போலியான, பொய்யினும் பொய்யான ஓர் ஐயூபிச் சிறுவனைக் கண்கண்ட சுல்தானுகப் பிரகடனப்படுத்துவதில் எப்படி வெற்றி பெற்றுர்? அவர் இந்த ஐயூபியைப் பட்டத்துக்கு உயர்த்துவதற்காகக் கைக்கொண்ட நூற்றுக்கு நூறு போலித்தனமான போக்கிரிச் செயல்களுடனே இந்தப் போலிக் கடிதத்தை ஒப்பிட்டுப் பார்த்தால், இதுவும் ஒரு போலியா? உரிமையற்ற ஒருவனைப் பட்டத்துக்கு உயர்த்துவதற்காகத் தம் தூய பதவியைச் சோரம் விடுக்கும் அந்த கலீபாவின் தீய நடத்தையுடனே நான் எடுக்கப் போகும் நியாயபூர்வமான நேரிய நடக்கையை ஒப்பு நோக்கினால், இது அதைவிடப் பெரிய பாபமா?—ஏ சுல்தான்! உங்களுக்குத் திறமை யில்லாவிட்டால், சும்மா குந்திக்கிடங்கள். நாளைத் தினம் நானே சென்று சிம்மாசனத்தில் அமர்ந்து, இந்தப்பொய்யான கடிதத்தை மெய்யான கடிதமாகச் செய்துவிட்டு வந்து விடுகிறேன்! உயிரிழந்த பிரேதத்தின் உடலைக் கிழித்துப் பக்குவம் பண்ணி, அதை உயிருடன் நடிக்கச் செய்த எனக்கு, இந்த ஜீவனுள்ள காகிதத்தை வைத்துக் கொண்டு ஒருபிரை மாய்ப்பதுதானு முடியாது...ஏ என் வைராக்ய சித்தமே! நீ தவறிவிடாதே! உன் சபதங்களை இனிது நிறைவேற்றி வைத்து, உலகோரைத் திடுக்குறச் செய்வாய்!"

மூஸஜுத்தீன் நிஜமாகவே இந்தக் காட்சியில் ஆயிரத்தில் ஒரு பங்காவது நிகழுமென்பதைக் கனவுகூடக் கண்டதில்லை. ஷஜருத்துர் பேசப்பேச, அவருடைய இரைப்பை ஏறிக்கொண்டே சென்று தொண்டையில் வந்து முட்டிக் கொண்டது போலிருந்தது. எனினும், சமாளித்துக் கொண்டார்.

"பாவம், கலீபாவை ஏன் நீ தூற்றுகிறுய்? அவருக்கு யாரோ துர்ப்புத்தி மந்திரியிருந்து போதித்திருக்க வேண்டும். அமீருல் மூமினீனைப் பற்றி இப்படி இழிவாக வெல்லாம் பேசலாமா? அவர் தலையிட்டதால் தானே நான் ஷாம் யுத்தத்தில் வெற்றி பெற முடிந்தது? உனக்கிருக்கிற கோபத்தில் என்னென்னவோ பேசிவிடுகிருயே!" என்று சாந்தமான தொனியில் ஷஜருத்துர்ரின் கணவர் மெல்லிய குரலுடன் மிழற்றினர்.

"தலைவலியைப் போக்கத் திருகுவலியைக் கொணராதீர்கள்! நீங்கள் உங்கள் கலீபாவை மெச்சிக் கொள்ளுங்கள். என் வயிற்றெரிச்சலை மேலும் கிளப்பாதீர்கள். கலீபாக்கள் என்று தங்களை வெட்கமில்லாமல் அழைத்துக் கொண்டவர்களின் நிஜமான சரித்திரங்களை நீங்கள் நன்குப் படித்திருந்தால், இப்படிப் பேசத் துணியமாட்டீர்கள். ஜுமுஆத் தொழ வைப்பதற்குப் போகக்கூட முடியாத கலீபா ஒருவர் தம் வைப்பாட்டி யொருத்தியை வெட்கங் கெட்டுப் போய்ப் பள்ளி வாசலுக்குத் தம் சார்பாக ஆண்வேடம் போட்டு



அனுப்பி வைத்த கதையை நீங்கள் கேள்விப் பட்டதில்லை போலும்!... எனக்கு இப்போது கலீபாக்களைப் பற்றிக் கவலையில்லை. என்னை அவமானப்படுத்தி, உதாசினஞ் செய்து, என் நாணமிக்க மடமையைக் காற்றில் பறக்கவிடச் சூது செய்த கலீபாவைப் பற்றித்தான் எனக்குக் கவலை. அந்த கலீபாவே செய்திருந்தாலும், அல்லது அவர் கேட்பார் பேச்சைக் கேட்டு நடந்திருந்தாலும், எனக்கு ஒன்றே தான். நான் அவர் நியமித்தனுப்பியமூஸாவை ஒழித்துத் தீர்த்த பிறகுதான் நல்ல உறக்கம் கொள்ளுவேன்!"

மூஸஜுத்தீன் விவேகத்துடன் மௌனம் பூண்டுவிட்டார். தாடி ரோமத்தின் நுனியை நெருடிக் கொண்டிருந்தார். அதற்குள் இராப் போஜனம் வந்துவிட்டது. சீக்கிரமாக அவர் உணவை உட்கொண்டு விட்டு, கையைக் கழுவித் துடைத்துக் கொண்டே எழுந் தமர்ந்தார். அங்கே ஷஜருத்துர் நாணற் பேனுவுடனும், அரசாங்கக் கட்டளை பொறிக்கப்படும் கெட்டியான தஸ்தாவீஜ் காகிதத்துடனும், மைக்கூட்டுடனும் நின்று கொண்டிருந்ததைக் கண்டார்.

"இவை யெல்லாம் எதற்காக?" என்று மூஸஜு ஆவலுடனே வினவினர்.

"அடுத்த நடவடிக்கைகளைத் தாங்கள் எழுதிக் கையெழுத் திடுவதற்காகத்தான்!" என்று பொய்யான புன்முறுவலுடனே புகன்றர் ஷஜருத்துர்.

மூஸஜுத்தீன் ஒருகணம் யோசித்தார். மறுபேச்சின்றிக் காரியத்தைச் செய்து முடிக்காவிட்டால், தாம் பிரேதமாகிப் போய்விடுவோரென்பதை அவர் உணர்ந்து கொண்டார். அக்கணமே பேனுவை எடுத்து எழுதலாயினர்:—

"மிஸ்ரின் ஸல்தனத்தை எதிரியிடம் காட்டிக் கொடுப்பதற்காகப் பயங்கரச் சூழ்ச்சி செய்து, மன்னிக்க முடியாத தேசத்துரோகக் குற்றமிழைத்த மூஸா என்னும் மலிக்குல் அஷ்ரபை, இந்நாட்டின் நன்றிவிசுவாசமிக்க சுல்தானுகிய நாம் உடனே கைது செய்து கடுமையான காவலில் வைக்கும்படி அவசரமாக உத்தரவு பிறப்பிக்கிறோம். அல்லாஹுத் தஆலா நம் அனைவரையும் தேசத் துரோகிகளான நயவஞ்சகப் பாதகர்களினின்றும் காப்பாற்றி யருள்வானுக!

(ஒப்பம்) சுல்தான் அல்மலிக்குல் மூஸஜுத்தீன் ஐபக்."

இந்தத் தஸ்தாவீஜ் எழுதி முடிந்ததும், ஷஜருத்துர்ரே அதை வெடுக்கென்று பிடுங்கி ஈரமையைக் கருமணல் தூவி உலர்த்தி, சுல்தானின் கணையாழி முத்திரையை அதில் பொறித்து, குப்பிக்குள்ளிட்டு அடைத்துக் கொண்டே, "தொலைந்தான், என் முதல் எதிரி!" என்று முணு முணுத்தார்.

இறுதி ஐயூபி சுல்தானின் இறுதிக்காலம் இவ்விதமாக வந்து முடிந்தது. (தொடரும்)

ஒவ்வொரு காலத்தில் ஒவ்வொரு விதமான "பாஷன்" (Fashion) நோய் ஒவ்வொருவருக்கும் பிடிப்பது வழக்கம். தற்காலப் பத்திரிகை யுலகில் இப்போது நிலவும் ஒரு பாஷனைப் பற்றியது இக் கட்டுரை.

# கேள்விகளும் பதில்களும்

சினிமாப் பத்திரிகைகள், அரசியல் பத்திரிகைகள், ஹாஸ்யப் பத்திரிகைகள், சமூக ஒழுக்கங் கற்பிக்கும் பத்திரிகைகள், வாரப் பத்திரிகைகள், மாதப் பத்திரிகைகள் முதலிய ஆங்கில, தெலுங்கு, தமிழ்ப் பத்திரிகைகள் பலவற்றுக்கு இப்போது ஒரு புதுமாதிரியான பித்து—அன்று, நாகரிக எழுச்சி பிறந்திருக்கிறது. என்னவென்றால்; அவற்றின் ஆசிரியர்கள், அல்லது துணையாசிரியர்கள் எந்தவிதமான கேள்விக்கும் பதிலளிக்கப்படும் என்று சொல்கிறார்கள். வாசக நேசர்கள் உடனே வண்டிக் கணக்கான கேள்விகளை வரைந்து அனுப்புகிறார்கள். அவற்றுள் எவையெவை பிரசுரிப்பதற்கு லாயிக்கானவையாக அந்த ஆசிரியர்க்குப் படுகின்றதோ அவை பொறுக்கி யெடுக்கப் படுகின்றன. மீதி குப்பைத் தொட்டிக்குள் போகின்றன. தேர்ந்தெடுக்கப்பட்ட கேள்விகளுக்கு விதம்விதமான வகையில் அந்த ஆசிரியர்களால் பதில்கள் வழங்கப்படுகின்றன. சில பதில்கள் கிண்டலாக இருக்கும்; சில ஹாஸ்யமாக இருக்கும்; சில ஆசிரியரின் (அல்லது விடையளிப்பவரின்) காலியான மூளை ஸ்தலத்தைப் பிரதிபலிப்பனவாக இருக்கும்; சில ஆபாசமாயிருக்கும்; சில பகுத்தறிவுக்கு அப்பாற்பட்டவையாயிருக்கும்; சில வின்னியாசமானவையாயிருக்கும்; சில விபரீதமானவையாயிருக்கும்; சில குறிப்பிட்ட பேர்வழிகளை மறைமுகமாக, அல்லது எதிரிடையாக மானபங்கப் படுத்துவனவாகக் காணப்படும்; இன்னம் சில பதில்கள் கயமையாகவும், கற்பனையாகவும்; ஆபாசமாகவும், அசுசியாகவும், காரசாரமாகவும், சமயத்தில் போக்கிரித்தனமாகவும், பொறுப்பற்றதனமாகவும், குறும்பாகவும், கோமாளித்தனமாகவும்; கபடத்தனமாகவும் காணப்படும்.

இன்று நம் நாட்டிலுலவும் மிக விலையுயர்ந்த 'பிலிம் இந்தியா' என்னும் பிரமாதமான ஆங்கில ஆர்ட்பேப்பர் சினிமா மாசிகையிலிருந்து, மிகச் சாதாரண ஒன்றரையணா வாரப் பத்திரிகை வரையில் அனேகமாக எல்லா ஆங்கில, தமிழ்ப்பத்திரிகைகளிலுமே இந்தமாதிரியான அருவருக்கத்தக்க ஆபாசமான "கேள்வி—பதில்" என்னும் கட்டம் நுழைக்கப்பட்டிருக்கிறதைப் பொதுவாகக் காணலாம். நாமறிந்தவரையில் இப்படிப் பட்ட கேள்வி—பதில் பகுதியில் பம்பாய் "பிலிம் இந்தியா" ஆசிரியரான பாபுராவ் என்பவரும், பம்பாய் "பிளிட்ஸ்" பத்திரிகையாசிரியரான கரஞ்சியா என்பவரும் மட்டுமே தங்கள் சொந்தப் பெயரைத் திரையிட்டு மூடாமல், கற்பனைப்பெயர் சூட்டிக்கொள்ளாமல் கேள்விகளுக்குப் பதிலளிக்கிறார்கள். மீதிப்பேர்வழிகள் "கொட்டாப்புளி" யென்றும், "குண்டாந்தடி"யென்றும், "குண்டூசி" யென்றும், இன்னம் அதுவென்றும் இதுவென்றும் "அதிர்வேட்"டென்றும் முகமூடியிட்டுக்கொண்டு பதிலளிக்கிறார்கள். தாங்கள் எழுதும் பதில்களால் தாக்கப்பெறுகிறவர் கோபமுற்று, தங்களையே வந்து தாக்காமல் இருப்பதற்காகவே இப்படித் தலையை மறைத்துக் கொள்கிறார்களோ வென்று நினைக்கவேண்டியிருக்கிறது.

அந்தக் கேள்வி—பதில் பகுதியைப் படித்தீர்களானால் பதிலளித்திருப்பவரைப் பற்றி நீங்கள் என்ன அபிப்பிராயங் கொள்வதாயிருப்பினும், முதலில் ஒரு விஷயத்தைக் கவனிப்பீர்கள்: அதுதான், கேள்வி விடுப்பவர்களையும் அவர்கள் விடுக்கும் கேள்விகளையும் பற்றி நீங்கள் கொள்ளும் அபிப்பிராயமாகும். நம் நாட்டில் படிக்காத முட்டாள்கள்கூடக் கேட்காத, கேட்கமுடியாத, கேட்க நினையாத அப்படிப்பட்ட அசப்பியமான, ஆபாசமான, கயமையான, கேள்விகளைப் "படித்த பிரகஸ்பதிகள்" கேட்பதை அங்குக் காணலாம். மேலும், நம் நாட்டில் இப்படிப் பட்ட பத்திரிகைகளைப் படிக்கிற புத்திசாலிகளின் ஞான விஸ்தீரணம் எப்படிப்பட்டதாயிருக்கிறதென்பதையும் நாம் அதன் மூலம் கண்டுகொள்கிறோம். தங்களுக்குப் புரியாத விஷயத்தைப் புரிந்துகொள்வதற்காகக் கேள்வி கேட்பவர்களைவிட, தாங்கள் எதிர் பார்க்கிற பதிலை அவ்வாசிரியர் தருகிறாரா வென்பதைச் சோதிப்பதற்காக, அல்லது





பதில் விடுப்பவரைக் கிண்டல் செய்வதற்காக, அல்லது குறிப்பிட்ட ஒருவரை, ஒரு மதத்தை, ஒரு சமூகத்தை, ஓர் அரசியல் தலைவரை, ஒரு மார்க்கப் பெரியாரை அவமானப்படுத்துவதற்காக வென்றே சிலபேர் கேள்வி விடுக்கிறார்கள். மற்றுஞ் சிலர் இன்ன நடிகை எப்போது பிறந்தாள், அவள் நிறமென்ன, அவளுக்கு எத்தனை புருஷர்கள் உண்டு, பிள்ளை குட்டிகள் எத்தனை, எத்தனை முறை விவாக விலக்குப் பெற்றிருக்கிறாள், எத்தனை கணவர்களை இவளே உதறித்தள்ளியிருக்கிறாள், அவளை அடைய இவர்களால் முடியுமா, இத்தியாதி ஆபாசங்களைக் கேட்பதில் ஆனந்தங் கொள்கின்றனர். வேறு சிலர் மிகச் சாதாரண எட்டு வயது சிறுவன்கூட நன்கு தெரிந்துகொண்டிருக்கும் வெகு அற்பமான வினாக்களை விடுக்கின்றனர். இன்னம் சிலர் அந்த ஆசிரியரையே கிண்டல் செய்து, அவருடைய அந்தரங்க பகிரங்க வாழ்வுபற்றிய ஆபாசங்களையே கேள்வியாகக் கேட்டுவிடுகிறார்கள்.

பொதுவாக நோக்குமிடத்து, நம்நாட்டுப் பொதுமக்களின் சாதாரணப்பகுத்தறிவுஇந்த நாகரிகம் முதிர்ந்த நாட்டிலே எவ்வளவு அநாகரிக ஆபாசம் பிடித்ததாகக் காணப்பட்டு வருகிறதென்பதை மிகச் சரியாய்ப் பிரதிபிம்பித்துக் காண்பிக்கும் நிலைக்கண்ணாடியர்களவே அந்தக்கேள்விபதில்கள் விளங்கிவருகின்றன. பொதுமக்களின் தவறான போக்கைத் திருத்துவதென்னும் மிகவும் மகத்தான பொறுப்புடனே பேனாப் பிடித்துப் பத்திரிகையை நடத்தத் தொடங்கும் பத்திராதிபர்களென்போர், பிள்ளையார் பிடிக்கக் குரங்காய் முடிந்த கதையாக, கொஞ்சம் நஞ்சம் சீர் கெட்ட சமூகத்தை மேலும் குட்டிச் சுவராக ஆக்கிவிடுகிறார்கள். உலகத்தில் எல்லா விஷயத்தையும் எப்படிப்பட்ட மனிதனும் முற்றும் தெரிந்துகொண்டிருப்பது முடியவே முடியாது. ஏனென்றால், மனிதன் கடவுளல்லன். இங்ஙனமிருக்க, "நானே சகலமும் தெரிந்த பிருகஸ்பதி, ஆண்டவனுக்கேகூடஎனக்கிருக்கிற அவ்வளவு ஞானம் இருக்க முடியாது! எனவே உங்களுக்கு எந்த விஷயமாக என்ன சந்தேகம் வந்தபோதிலும் என்னிடம் கேளுங்கள். நான் உங்களுக்கு விடையளிக்கிறேன்," என்று இறுமாப்புடன் மார்தட்டி ஆண்டவனைப் புறக்கணித்து எல்லாக்கேள்விகளுக்கும் துடுக்காகவும், மிடுக்காகவும், பொறுப்பற்ற தனமாகவும் கபடத்தனமாகவும், மெய்க்குப் புறம்பாகவும், உண்மைக்கு மாற்றமாகவும் விடையிறுக்க முற்படுவது ஈடிணையற்றபெரிய ஷைத்தானியத்தாகவே காணப்பட்டு வருகின்றது.

இன்றைய உலகிலே பெரும்பாலும் கம்யூனிஸ சித்தாந்தமும் நாஸ்திக வாதமுமே மக்களைக் கௌவிக்கொண்டு கிடக்கின்றன. அவ்விரு கொள்கைகளுமே மனித ஒழுக்கத்துக்கும் நல்லுறவான வாழ்வுக்கும் முற்றுப் புள்ளி வைக்கத் தக்கனவாகக் காணப்படுகின்றன. எப்படிப்பட்ட கேள்விகளுக்கும் பதில் தருகிறோமென்று மார்தட்டும் ஆசிரியர்களைக் கண்டதும், முற்சொன்ன ஒழுக்கஹீனக் கொள்கைகளுக்கு இலக்காகிக் கிடக்கும் மக்கள் தங்கள் உள்ளத்தை அள்ளிக்கொட்டச் சிறந்த சந்தர்ப்பம் வந்து வாய்த்துவிட்டதென்று தெரிந்து தங்கள் கும்பித்தொட்டியைத் திறந்துவிட்டு நாட்டையெல்லாம் நாற்றம் வீசும்படி செய்துவிடுகின்றார்கள்.

சினிமாப் பத்திரிகைகளையும், குறிப்பிட்ட ஓர் அரசியற் கட்சியைச் சார்ந்த சஞ்சிகைகளையும் ஹாஸ்ய இதழ்களையும் நடத்துகிறவர்கள் இத்துறையில் புரிந்துவரும் கிண்டல்களையாவது நாம் மன்னித்துவிடலாம். ஆனால், முஸ்லிம் மக்களைத் தவறான வழியிலிருந்து நேரான வழிக்குத் திருப்பிவிடவேண்டுமென்று கருதுகிற சில பத்திராதிபர்களுங்கூடக் கொஞ்சமும் ஆண்டவனச்சமோ, மத பக்தியோ, ஒழுக்க ஞானமோ இல்லாமல் மிகவும் அற்பமாகவும், விளையாட்டுத்தனமாகவும், விஷமத்தனமாகவும் முஸ்லிம் சமூகத்தைப் பாதலப் படுகுழிக்கு ஈர்த்துச் செல்வதைத்தான் ஆண்டவனேகூட மன்னிக்கமாட்டானென்று கருதவேண்டியிருக்கிறது. ஏனென்றால், சில முஸ்லிம்களென்போர் நந் தமிழ் நாட்டிலுள்ள சில இடங்களில் முஸ்லிமென்பவர்களால் நடத்தப்படும் பத்திரிகைகளுக்குச் சரமாரியாகக் கேள்விகளை விடுக்கிறார்கள். அவற்றுள் பிரசுரிக்கத் தக்கவை என்று தேர்ந்தெடுத்துப் பொறிக்கப்படும் பல வினாக்களைப் பார்த்தால் அவை நம்மை அப்படியே பிரமிக்கச் செய்துவிடுகின்றன, "ஆண்டவன் எங்கே இருக்கிறான்?" என்றும் "ஈமான் கொள்ளாவிட்டால் என்ன?" என்றும் "மற்ற மதங்களுக்கெல்லாம் அவ்வம்மதஸ்தாபகரின் பெயரால் நாமமிடப்பட்டிருக்க நம் மதத்தை நாம் ஏன் முகம்மதிய மார்க்கம் என்று அழைக்கக்கூடாது?" என்றும், "இஸ்லாத்தில் நோன்பு வைப்பது பர்ளா?" என்றும், "சிராத்துல் முஸ்தகீம்பாலம்எங்கே கட்டப்பட்டிருக்கிறது?" என்றும், "என் தங்கையை நான் மணக்கலாமா? என்றும் இன்

னம் விவரிக்க முடியாத விதம் விதமாகவும் சில "முஸ்லிம்"கள் என்போர் அப்பத்திரிகைகளுக்கு அடிக்கடி வினவிடுக்கின்றனர். ஈமான் என்றால் என்ன? இஸ்லாமென்றால் என்ன? என்றுகூடத் தெரிந்துகொள்ளாத ஜாஹில்கள் தங்களைவிடப் பெரிய உலமாக்களென்று கருதும் பத்திராதிபர்களுக்கு இத்தன்மையாய வினக்களை விடுத்து, தாங்களும் உண்மை முஸ்லிம்களல்லர், தங்களுக்காகப் பத்திரிகைகளை நடத்துபவர்களும் உண்மை முஸ்லிம்களல்லர், எல்லாம் வெறும் ஹம்பக் என்று நிதர்சனப்படுத்திக் காண்பித்து விடுகிறார்கள்.

அற்பத்தனமான யோக்யப் பொறுப்பற்ற கேள்விகளும் அவற்றுக்கு வழங்கப்படும் வயிற்றெரிச்சலான விடைகளும் ஒருபுறமிருக்கசில நல்ல மனிதர்கள் நிஜமாகவே சில மார்க்க விஷயமான உண்மையான ஐயங்களை அப்படிப்பட்ட கிண்டல் பேர்வழியான ஆசிரியர்களுக்கு எழுதிக் கேட்கிறார்கள். எல்லாக் கேள்விக்கும் கிண்டலாகப் பதிலெழுதி எழுதிப் பழகிப்போன அவர்களுடையபேனாமுனை இப்போது இந்தக் கடுமையான மார்க்க விதி பற்றிய நிஜக்கேள்விகளுக்கும் சுயமாகவே கிண்டலான, பொறுப்பற்ற, இஸ்லாமல்லாத குபிரியத்தான, ஷைத்தானிய, அயோக்ய, ஆபாச, நீசத்தனமான பதில்களைக் கிறுக்கித்தள்ளிவிடுகின்றது. அந்தக் கேள்வியைக் கேட்டவருக்கு ஒரு பங்கு ஆனந்தம், பதில் சொன்னவருக்கு இருமடங்கு ஆனந்தம்; அவ்விரண்டையும் படிக்கிற ஏமாந்த சோணகிரிகளுக்கு மூன்று மடங்கு பேரானந்தம். இந்தக் கேடுகாலத்துக்கு இறைவனே விரைவில் முற்றுப்புள்ளி வைக்கவேண்டும்.

“மெதுவாகக் காலடி வைக்கவுங்கூட மலக்குகள் அஞ்சுகிற இடத்தில் ஷைத்தான் தொப்பென்று குதிக்கத் தயங்குவதில்லை” என்று ஆங்கிலத்தில் பழமொழி யொன்று உண்டு. அந்தவிதமாக, பெரிய பெரிய மார்க்க அறிஞர்களும், மகான்களும், பேரறிஞர்களும், நிரம்பப் படித்தவர்களும், வித்யா விற்பன்னர்களும், இஸ்லாமிய ஞானம் நிரம்பிய நிஜமான அல்லாமாக்களும் மௌலானாக்களும் மௌலவீகளும்கூடச் சற்று ஐயத்துடனும், அடக்கத்துடனும், பெரிய பயத்துடனும் விடையிறுக்கிற, அல்லது விடையிறுக்கத் தயங்குகிற ஷரீஅத் சம்பந்தமான கடினமான வினக்களுக்கு, ஷைத்தானை நிகர்த்த கிண்டல் பேர்வழிகள் துடுக்காகவும், மிடுக்காகவும், துணிச்சலாகவும், தெருக்கூத்து நாடகத்தில் மேடையதிரக் குதித்துக் கொண்டு வந்து நிற்கும் கோமாளியைப்போல் மிக நீசத்தனமாய்ப் பதிலிறுப்பது, மக்களின் மனத்தைச் சுடும் துப்பாக்கி ரவைகளாகவே நின்று திகழ்கிறது. அப்படிப்பட்ட விபரீதமான பதில்களைப் படிக்க நேரும் நமது அபிமானிகள் சிலர் நம்மிடம் வந்து முறையிட்டுக் கொள்ளும்போது வாஸ்தவமாகவே எமக்கு நெஞ்சு திக்கென்றுதான் அடிக்கிறது. சகலமும்கற்றவன் ஆண்டவனே என்றும், மறைவானவற்றையும் பகிரங்கமானவற்றையும் அறிகிறவன் அவனே என்றும் நன்னம்பிக்கை கொண்டுள்ள நாம், நமக்கே சகலமும் தெரியுமென்று ஆண்டவனுக்கு மாறு செய்வதும், ஆண்டவன் வழங்க வேண்டிய தீர்ப்பை நாம் வழங்குவதும் சாத்விகமுமாகாது; இஸ்லாமுமாகாது.

சென்ற பல மாதங்களுக்குமுன் எமக்கு ஒரு நண்பர் அச்சடித்த ஒரு காகிதத்தின் சிறு துண்டொன்றை மட்டும் வெட்டியெடுத்து எமது பார்வைக் கனுப்பி, அதிலுள்ள விஷயம் பற்றிய எமது அபிப்பிராயம் என்னவென்பதைத் தெரிவிக்கும்படி கோரியிருந்தார். அந்தத் துண்டைப் பார்த்ததிலிருந்து அஃதொரு பத்திரிகையிலிருந்து வெட்டியெடுக்கப்பட்டிருக்க வேண்டுமென்று தெரியவந்தது. அதில் வினவும், விடையும் காணப்பட்டன. வினவிடுத்தவரின் பெயர் பொறிக்கப்பட்டிருந்ததிலிருந்து, கேள்வி கேட்டவர் ஒரு முஸ்லிம் என்று தெரிந்தது. அவர் கேட்டிருக்கிறார்: “அண்ணாத்துரையை ‘அறிஞர் அண்ணாத்துரை’ என்கிறார்களே. உங்கள் அபிப்பிராயம் என்ன?” என்று. அதற்கு விடை: “அவரை அறிஞர் என்று சொல்லாமல் வேறு யாரைத்தான் அறிஞர் என்று சொல்வது?” என்று பொறிக்கப்பட்டிருந்தது.

இந்த விடையை யளித்தவர் யாரென்று எமக்குத் தெரியாது. ஏனென்றால், எமது பார்வைக்கு வந்த அந்தத் துண்டுதாளில் வினவிடுத்தவரின் பெயர் மட்டுமே காணப்பட்டதன்றி, விடையிறுத்த பிருகஸ்பதியின் பெயர் பொறிக்கப்பட்டில்லை. எனினும், அந்தத் துண்டை எமக்கு அனுப்பி வைத்தவர் அஃதொரு முஸ்லிம் பத்திரிகை யிலிருந்து வெட்டியெடுக்கப்பட்டதாக அறிவித்திருந்தமையால், இப்படிப்பட்ட விடையை யளித்தவர் ஒரு “முஸ்லிமாக”ப் பிறந்தவராகவே இருத்தல் வேண்டும் என்று யூகித்தோம். அந்த யூகம் சரியென்றால், எமது அபிப்பிராயம் இதுவாகும்:—

“அல்லாஹு ஆலிமுல் கைபி வஷ்ஷஹாதா!”—(ஆண்டவனே மறைவானவற்றையும் பகிரங்கமானவற்றையும் அறிகிறவன்) என்று ஈமான் கொண்டு, ஆண்டவனையன்றி வேறு பெரிய அறிஞனோ, அல்லது அவனுக்கு நிகரான அறிவு படைக்கப்பட்டவனோ எவனுமே, எங்குமே, என்றுமே, எப்போதுமே இருந்ததில்லை, இருக்கவில்லை, இருக்கமாட்டான் என்று பரிபூரணமான விசுவாசங் கொண்டு, உண்மை முஸ்லிமாக உயிர்வாழ்கிற எப்படிப்பட்டவனும் இந்தமாதிரி இறைத்தூஷணமான பதிலை எழுதவும் நினைக்கமாட்டான். அல்லாஹ் மட்டுமே அறிஞனவான் என்ற ஈமான் ஊறிப்போன உள்ளத்தினன், “அண்ணாத்துரையை யன்றி வேறு யாரை அறிஞர் என்று கூற முடியும்?” என்று சவால் விடுப்பான்? இல்லையே! அவன் கூறுவான்: “தம்பி! உன்னுடைய அண்ணாத்துரை அறிஞரா, அல்லவா என்பதை நான் அறியமாட்டேன். எல்லா அறிஞர்களுள்ளும் பேரறிஞனவனை நாம் ஈமான் கொள்ளும் அந்த அல்லா(ஹ்) ஒருவனே அறிவான்!” இப்படிப் பதிலெழுதினால் அர்த்தமிருக்கிறது; கருத்திருக்கிறது: அறிவிருக்கிறது. இதை விடுத்து, “அவரை (அண்ணாத்துரையை) அறிஞர் என்று சொல்லாமல்வேறு யாரைத்தான்.—(அவன் ஆண்டவனாகவே இருக்கட்டும், அல்லது அவனனுப்பிய ரசூலாயிருக்கட்டும், அதைப்பற்றி எனக்குக் கவலையில்லை)—அறிஞர் என்று சொல்வது?” என்று பதிலெழுதி, சகல அறிஞர்களுள்ளும் மகாபெரிய அறிஞனாகிய அல்லா(ஹ்)வுங்கூட அண்ணாத்துரையின் அறிவுக்கு முன்னே எம்மாத்திரம்? என்ற கருத்துப்படக் குபிரியத் போதனைபுரிந்தால் அந்த ஞான சூனிய பிருகஸ்பதியை என்ன கௌரவப் பெயரிட்டழைப்பது என்று எமக்கொன்றும் தோன்றவில்லை.

வினவிடுப்பவர்களின் கேள்விகளுக்கு மறைமுகமான வழிகளில் பதில் விடுத்து இறைவனைத் தூஷிக்கும் விடையளிப்பவர்கள் ஒருபுறமிருக்க, நேரிடையாகவே இறைவனை இழிவுபடுத்தும் சில விடைகளும் அவ்வப்போது சிற்சில சஞ்சிகைகளில் வருவதாகக் கேள்விப்படுகிறோம். இதற்காகக்கூட நாம் வருந்தவில்லை; ஆனால், இப்படி யெல்லாம் இஸ்லாத்தையும், இறைவனையும், ரசூலையும், குர்ஆனையும், ஹதீதையும், ஷரீஅத்தையுங் கூடப் பெரிதும் இழிவுபடுத்துகிறார்கள் இந்த மாதிரியான குப்பைத் தொட்டிப் பத்திராதிபர்கள் என்பது நன்கு தெரிந்துங்கூட, இஸ்லாத்தை அடியோடு தொலைத்துவிடவேண்டுமென்று கங்கணங் கட்டிக் கொண்டிருக்கும் சில சீதேவிகள் மீண்டும் மீண்டும் இத்தன்மைத்தான கேள்விகளை அந்தப் பத்திரிகாசிரியர்களுக்கு எழுதியெழுதிக் கேட்கின்றனரே என்று நினைக்கும்போதும், அங்கே மூக்கறுபட்ட பலர் எம்மிடம் வந்து சொல்லி முறையிட்டுக் கொண்டு அழுவதைக் கருதும்போதும் நிஜமாகவே மனமுருகிப் பெருவருத்தமடைகிறோம்: யாரைப் பார்த்து? விடையிறுத்தவரைப் பார்த்தன்று; வினவிடுத்தார்களே அந்தப் பிருகஸ்பதிகளைப் பார்த்து.

எந்தக் குறிப்பிட்ட ஒரு பத்திரிகையின் கேள்வி—பதில் பகுதிக்கும் சூடு கொடுக்க வேண்டுமென்னும் அடிப்படை நோக்கத்துடன் இக்கட்டுரையை நாம் வரையமுற்படவில்லையாகையால், எல்லா உதாரணங்களையும் எடுத்துவைத்து இங்கே நாம் ஆராய்ச்சி செய்து காட்டிக் குறிப்பிட்ட விடையிறுத்தவருக்கு ‘அறிவிலி’ப் பட்டம் வழங்க வரவில்லை. நம் நேயர்களே தங்கள் சொந்தப் பகுத்தறிவைப் பயன்படுத்தி அப்படிப்பட்ட எண்ணிறந்த வினவிடைகளைப் படித்துச் சரியான முடிவு கட்டக்கூடிய விவேகிகளென்பதை நாம் நன்கறிவோம். எனவே, அவர்களுக்கு ஏற்கெனவே விளக்கமான விஷயத்தை மீட்டும் தெளிவுபடுத்த வேண்டிய அவசியமில்லை. ஆனால், ஒரே ஓர் உண்மையை மட்டும் அலசிக்காட்டிவிட வேண்டுமென்றே இதை வரைகிறோம். என்னவென்றால்:—

எவனுக்கு எந்த விஷயத்தைப் பற்றி ஒன்றுமே தெரியாதோ அவன் கண்ணியமாகவும், கௌரவமாகவும், “ஐயா, எனக்கு இது தெரியாது,” என்று உண்மையைச் சொல்லிவிடுவதில் தவறே இல்லை. இப்படி அவன் தன்னைப் பற்றி உண்மையை உரைத்ததால் மனச்சாந்தியும் பெறுகிறான்; ஆண்டவனுக்கும் நல்லடியானாய் விடுகிறான்; நயவஞ்சகனென்னும் பழிச்சொல்லுக்கு ஆளாகாமல் தப்பி விடுகிறான். அவனை எல்லாரும் நேசிக்க ஆரம்பிக்கின்றனர். இப்படிக்கின்றி, எவனுக்கு எந்த விஷயத்தைப் பற்றி ஒன்றுமே தெரியாதோ அவன் கண்மூடித்தனமாகவும் வீண் மமதையுடனும், “எல்லாம் எனக்கே தெரியும். உங்களுக்குத் தெரியாததையெல்லாம் என்னிடம் கேட்டுத் தெரிந்துகொள்ளுங்கள். நீங்கள் எந்தக் கேள்வி கேட்டாலும் நான் விடையிறுக்கத் தயார்!” என்று

யச்சைப் பொய்யைப் புளுகித் தள்ளுகிருனே அவன்மீதே சகல தவறுகளும் எல்லாக் குற்றங்களும் சென்று சுமர்கின்றன. இப்படி அவன் தன்னைப்பற்றிப் பொய்யாகப் பீத்திக் கொண்டால் மனக்கிலேச முறுகின்ருன்; ஆண்டவனுக்குப் பாபியாகி விடுகின்ருன்; நயவஞ்சகனுகத் திகழ்கிருன்; ஆண்டவனின் கூற்றுக்கு மாற்ற முரைக்கிருன்; அல்லா(ஹ்) ரசூலைத் தின்று ஏப்பம் விட்டுவிடுகிருன். அவனை நாளடைவில் எல்லாரும் வெறுக்கவும் தூஷிக்கவும் ஆரம்பிக்கின்றனர்.

இதிலே மற்ருெரு விசேஷம் என்னவென்ருல், அவ்வப்போது கேட்கப்படும் கேள்விகளுக்கு உடனுக்குடன் 'சட்சட்'டென்று பதிலிறுக்கிற காரணத்தால் அந்த விடையளிக்கும் ஆசிரியர்கள் முன்னுக்குப் பின் முரணில்லாத முறையில் தங்கள்பதில்கள் அமைகின்றனவா என்பதைச் சிந்திப்பதற்கு அவகாச மிருப்பதில்லை; அல்லது முரணில்லாமல் எழுதவேண்டுமே என்னும் பொறுப்புணர்ச்சி யிருப்பதில்லை. எனவே, அவர்களைப் பார்த்து அவர்களே பரிகசித்துச் சிரித்துக் கொள்ளத்தக்க வெட்கக்கேடான வகையில் சில சமயங்களில் ஒரே தினுசான கேள்விகளுக்கு நேரெதிர் எதிரான பதில்கள் அவர்களுடைய பேனு நுனியிலிருந்து உதிர்ந்துவிடுவதுண்டு. மேலும், கேள்வி கேட்பவனுக்கிருக்கிற ஞானத்தை விட விடையிறுப்பவரின் ஞானம் ஒரு குறிப்பிட்ட விஷயத்தில் குறைவுபட்டிருக்குமேயாகுல், அந்தக் கேள்வியையும் பதிலையும் சேர்த்துப் படிக்கும்போது அது மிகவும் ஹாஸ்யமாகவும் காணப்பட்டு விடும்.

கற்றது கைம் மண்ணளவு, கல்லாதுல களவு என்னும் சாதாரண விவேகங்கூட இல்லாமல், இன்று நம் நாட்டிலே தடியெடுத்தவனெல்லாம் தண்டற்காரனென்னும்பாபோன்று பத்திரிகை நடத்துபவரெல்லாம் பெரிய அறிவுச் சுடரொளிகள் என்று தங்களைத் தாங்களே வியந்துகொண்டு வாய்க்கு வந்தபடி உளறிக் கொட்டுவதும், இப்படி உளறித் தள்ளுவது தங்களுடைய அசகாயசூரத்தன அறிவுத் தேஜஸை அள்ளி வீசுகிற தென்று நினைப்பதும், தாங்கள் எழுதிய பதில்களைத் தாங்களே திரும்பத் திரும்பப் படித்து வியந்து புளகாங்கிதம் பூப்பதும் இன்றைய பத்திரிகை யுலகில் நிலவும் ஒரு 'பாஷனு'—நாகரிகச் சின்னமாக நிலவிவருகிறது. எல்லாத் துறையிலுமே ஒவ்வொரு வர்த்தகருமே இந்தக் காலத்தில் பிறரை ஏய்த்துப் பொருளீட்டுவதைப் போலவே, கௌரவமிக்க பத்திரிகைத் தொழிலும் கள்ளமார்க்கெட் வர்த்தகமாகக் கருதப்பட்டு, கேள்வி—பதில் என்னும் அதிர்வேட்டு வெடித்து, இந்தப் பகுதியைப் படிப்பதற்காக வென்றுவது பொதுமக்கள் ஏமாந்துபோய் ஆயிரக் கணக்கில் தங்கள் பத்திரிகைகளைப் படிக்கமாட்டார்களா? என்று இத்தன்மைத்தாய பத்திராதிபர்கள் கனவு காண்கின்ருர்கள்.

சென்னையிலிருந்து வெளிவரும் ஓர் ஆங்கில மாதமிருமுறைப் பத்திரிகையில் எமது அன்பரொருவர் துணையாசிரியராக அமர்ந்தார். அவர் இந்த மாதிரியான கேள்வி—பதில் பகுதியை அந்தப் பத்திரிகையில் நுழைத்துவிட்டார். அவரைப் பார்த்து; "என்ன ஐயா, இந்த விபரீதம்!" என்று சாதாரணமாக வினவினேம். அதற்கவர் இப்பக்கமும் அப்பக்கமும் திரும்பித் திரும்பிப் பார்த்துக்கொண்டே மெதுவாக, "எல்லாம் வியாபாரத் தந்திரம். இந்தப் பகுதியைப்போடுவதால்தான் கொஞ்சம் கூடுதலான பிரதிகள் விற்பனையாகின்றன. வேறு என்ன பண்ணுவது, இந்தப் போட்டி மிகுந்த உலகத்தில்?" என்று உண்மையை ஒத்துக்கொண்டார்.

எனவே, கேள்வி கேட்பவர்களின் உள்ளங்களில் எழும் நிஜமான ஐயங்களுக்கு விடையளித்து அவர்களை அறிவாளிகளாக ஆக்கிவிட வேண்டும் என்னும் எண்ணத்தைவிட, இந்த மாதிரி ஒரு 'ஹம்பக்'—(பித்தலாட்டம்) செய்வதால் உலகத்தை ஏமாற்றி இன்னம் சற்றுக் கூடுதலான பிரதிகளை விற்று நாலு காசு சம்பாதிக்கலாம் என்னும் எண்ணமே சற்றேறக் குறைய எல்லா வினுவிடைப்பகுதி வெளியிடும் தமிழ், ஆங்கில, தெலுங்கு, கன்னட பத்திரிகையாசிரியர்களின் அந்தரங்கக் கபட நோக்கமாக இருந்து செயலாற்றி வருகிற தென்று விகசிதமாய் விளங்கக் கிடக்கின்றது.

## பர்மா நண்பர்களுக்கு

**ஷாஜஹான் புக் டெப்போ** வின் நூல்களும் **தாருல் இஸ்லாம்,"** **"முஸ்லிம் முரசு"** **"மறுமலர்ச்சி"** முதலிய முஸ்லிம் பத்திரிகைகளில் எது தேவைப்பட்டாலும் நீங்கள் சென்னைக்கோ, திருச்சிக்கோ எழுதத் தேவையில்லை. கீழ்க்காணும் விலாசத்தில் உடனுக்குடன் பெற்றுக் கொள்ளலாம். பதிலறிய விரும்புவோர் ஸ்டாம்பு அனுப்ப வேண்டும்.



சென்ற மேமாதத் தொடர்

# குர்ஆன் ஷரீபை

## நான்மொழிபெயர்த்த முழுவிருத்தாந்தம்.

*[By B. D. Shah]*

[சென்ற சில கட்டுரைகளிலும், இனி வரும் சில கட்டுரைகளிலும் வெளிவரும் விஷயமுழுதும் உண்மையேயாம். எனவே, எத்தகைய படாபாக்கவீயோ, சோட்டாபாக்கவீயோ சிறிதும் ஐயுறத் தேவையில்லை; ஆத்திரப்பட்டு ஆவதொன்றுமில்லை. என்பால் எல்லாவற்றிற்கும் எழுத்துமூலமான சாக்ஷியங்கள் இல்லாமற் போகவில்லை. அவசியப்படுமேல், அவை வேண்டுங்கால் வெளியிடப்படும்.]

இனி, இந்த என் மைத்துனியின் மாப்பிள்ளை எனக்குக் கொடுத்த என்றும் ஆறுத மாறுத சூடு, என்றும் மறக்க முடியாத குத்து, நன்றிகொன்ற செய்கை ஒன்றுண்டு; இவர் தா. இ. த்தை வாரத்தாளாக்கினர்; நாங்கள் எங்கள், தா. இ-த்தை மீட்டும் மாதப்பத்திரிகையாகத் துவக்க 1947-ஆம் பிற்பகுதியில் ஏற்பாடு செய்து வந்தோமென்பதை யறிந்த இந்தப் பிருஹஸ்பதி இனியொரு நன்றி கொன்றி எங்கள் மாஜீ குமாஷ்தாப்பையலைக் கொண்டு தமது 3—7—47. தா. இ. த்தில் 3 பத்திகள் என்னைக் குறை கூறி, எல்லாரும் பிரமித்துப்போமாறு பிரசுரித்தார். முன்னெரு முறை தா. இ. நடத்தி நாங்கள் ஒரு தலைமுறைக்கு வேண்டிய ரூபாய்களை, (அஃதாவது, முப்பதாயிரம்) அடித்துக் கொண்டு போய், எங்களூரிலே பதுக்கி வைத்துவிட்டு, மறுபடியும் முஸ்லிம்களை ஏய்த்துப் பணம் பறிக்க இச்சென்னைக்கு வந்து பத்திரிகை ஆரம்பிக்கப் போவதால், சகல ஜனங்களும் சர்வ ஜாக்ரதையா யிருக்கவேண்டு மென்று எச்சரிக்கை விடுத்தார். இக்கூத்தில் மிக்க வேடிக்கை என்னவென்ருல், இவருடைய இன்னஞ் சில ஹிந்து நண்பர்களெல்லாம் ஒன்றுசேர்ந்து எதிர் வழக்காடிப் பார்த்தும், 3 வருட ஆழிய ஆராய்ச்சிக்குப் பின்னே, "அபீஷியல் அஸைனி" ஹைக்கோர்ட்டுக்கு எழுதியனுப்பிய யாதாஸ்தில், நாங்கள் கார்டியன் பிரஸ், தா இ. கம்பெனிகளைத் தாறுமாறுய் (மிஸ்மானேஜ் செய்து) நடத்தவில்லையென்றும், நாங்கள் எதுவும் கையாடவில்லையென்றும் குறிப்பிட்டிருந்ததை **அங்கீகரித்து, ஹைக்கோர்ட் நீதிபதி தீர்ப்புக் கூறியுள்ளது** என் "ஷட்டகருக்கு" ச்செவ்வனம் **தெரியும். இவர் கார்டியன் பிரஸ்ஸுக்குக் கொடுக்க வேண்டியிருந்த அச்சுக்கூலி உத்தேசம் 300 ரூபாயை நிர்ப்பந்தப் படுத்தி அபீஷியல் அஸைனி வசூலித்து விடத்தான் வேண்டுமென நான் வலியுறுத்திக் கோள்மூட்ட வில்லையென்பதும் இந்த "ஹாபிஸ் பாக்கவீ" நன்கறிவார். இன்னம், என் "ஷட்டகர்" தம் மனைவியை—என் மனைவியின் தங்கையை—எங்களூருக்கனுப்பி, நாங்கள் ரூ. 30,000 அடித்துவந்து அமுக்கிவைத்திருப்பது வாஸ்தவந்தானுவென உளவு விசாரித்துவரச் செய்தார். அம்மனைவி விசாரித்த உளவிலும் ஒன்றும் அவர் நினைத்ததேபோல் இல்லையென்பது நன்கு புலப்பட்டும், அப்பாலே அந்த அபோக்கிய காபிர் குமாஷ்தாவால் அப்பொய்க் கட்டுரையை வரைந்து வெளியிட்டுள்ளார். இதன் பயனுய், எம்முடைய நண்பர்களும், கொதுமலாகளெல்லாரும், "தாவுசாவின் சகல பாடியே—அவராபீஸில் 13 வருடம் இருந்தவரே—இவ்வாறு எழுதினுல், அது நிஜமாகத் தான் இருக்கும்," என்று ஒரு சிறிதே சந்தேகங் கொள்ளத் துணிந்துவிட்டார்கள். வாசக நேசர்களே! வில்லியம் ஷேக்ஸ்பியர் கூறுமாபோன்று, இதனினும் மா கொடிய இரக்கமற்ற குத்து (The most unkindest cut of all) வேறென்ன வேண்டப் படுகிறது? சிறிதே சிந்தியுங்களே!**

எந்த வொரு மத்ரஸாமவுலவீயின் **உதவியும் எனக்கு இருந்ததும் சரிதான், இல்லாததும் சரிதான். இஸ்லாமிய தொண்டு புரிய வந்ததாகவும், குர்ஆன் மஜீதை மொழி பெயர்க்க விழைந்ததாகவும் பசப்பிய "பாக்கவீ" "ஹாபிஸ்" படாமவுலவீயாகிய, என் மைத்துனியின் மணுளர் 13 ஆண்டுகள் மட்**

டும் தா. இ. ஆபீஸில் இருந்து சாதித்துக் கொட்டிய முரசை முன்னம் நீங்கள் செவ்வனம் படித்தீர்கள். அவருக்குச் சரியான— குர்ஆனை மொழிபெயர்க்கப் போதிய—இஸ்லாமிய அறிவாற்றலும், தமிழ்ப் பயிற்சியும் இல்லாமற் போய், எனக்குப் பற்பலத் தொல்லைகளும் அன்னவரால் ஏற்பட்டுவிட்டமையால், "ஜவாஹிருல்புர்க்கான்" வேலை 30-இல் மூன்று பாகங்களுடனே முற்றுப் புள்ளி வைக்கப்பட்டு நின்றுவிட்டது. "ஆடுந்திரிகை அரைச் சுற்றுவருமுன்னே ஒடுங் கவலை ஒரு கோடி" என்னுமாபோன்று, இடுக்கண்ணுக்குமேல் இடுக்கண்கள்; எதிர்ப்புக்குமேல் எதிர்ப்புக்கள். இக் காரணங்களின் விளைவாவெல்லாம் திருக்குர்ஆனின் முதலிரண்டு ஜுஜுஉக்களுடனும், இறுதி (அம்மயத்) ஜுஜுஉவுடனுமே என் மொழிபெயர்ப்பு ஊழியம் ஓய்ந்துவிடுவதாயிற்று. பொதுமக்களாதரவுங் குறையத் துவக்கிக்கொண்டது. லாகூர் மவுலானா முஹம்மதலீயின் அருமையான, ஆழிய அழகிய விரிவுரையின்(தப்ஸீரின்)அருமையையும் பெருமையையும் கண்ணுரக் கண்டும், இத் தமிழ்நாட்டு முஸ்லிம்கள் ஊற்றம்பெற்று உற்சாகம் மிக்கு உத்வேகத்துடனே உந்தி எழுந்துநிற்கவில்லை. யான் இதற்கு முன்னே அடிக்கடி இயம்பிவருமாபோன்று, இத் தென்னாட்டு முஸ்லிம் மக்களுக்குப் பொதுப்படையாயே சரியாயபோதுமான உண்மை இஸ்லாமிய ஊக்கம் ஒரு சிறிதும் கிடையாது. எள்ளத்துணை யார்வமேனும் உண்மையிலே இம் முஸ்லிம்களுக்கு இருந்திருக்குமாயின், இத்தனை நூற்றுண்டுகளாக நம் தமிழ்மொழியில் திருக்குர்ஆன் மொழிபெயர்க்கப்படாமலா போய்விட்டிருக்கும்? புரோகிதர்களும் பொல்லாத முல்லாக்களும் தங்களுக் குரிய சுயநயக் காரணத்தால் பொதுமக்களை மவுட்டியத்துள்ளேயே ஆழ்த்தி யமுக்கிவைக்க ஆசைப்படுவார்கள்; இஃது அவர்களது பிறவிக்குணமாயிருக்கிறது. பாமர மக்கள், அல்லா (ஹ்) என்ன ஏவியுள்ளான், அவனுடைய இறுதி நபி (சல்) என்ன எடுத்தோதியுள்ளார்கள் என்பவற்றை எட்டுணையும் அறியாது, அந்தப் புரோகிதமுல்லாக்களின் புராணப் புளுகு மூட்டைகளையே நம்பி நிற்கவேண்டுமென விழைவார்கள்; இஃது அவர்களுக் குரிய இயற்கை.

எஃது எவ்வாறாயினும், இஸ்லாம் இத் தமிழ் நாட்டுள் நுழைந்து பல நூற்றுண்டுகளாகியும், இன்று காறும் இறைவன் திருமறைக்கொரு மெய்யான (true) அரபுக்குச் சரியான (faithful) மொழிபெயர்ப்புச் செந்தமிழ்மொழியில் செவ்விய விரிவுரையுடனே வெளிவாராதிருப்பது ஒரு மாபெருங்குறையே யாகும். இவ்வுண்மையை எந்த மத்ரஸா மவுலவியாலும், அல்லது தமிழறி முஸ்லிமாலும் மறுப்பதோ, அல்லது மறைப்பதோ சாலாது. யான் இதற்கு முன்னே எழுதியிருப்பதேபோல், "தாவுசா குர்ஆனை மொழிபெயர்ப்பது கூடாது !" என்று முதலில் முல்லாக்கள் கூச்சலைக் கிளப்பினர்கள்; அவர்களுடைய் கூக்குரலைப் பொருட்படுத்தாது நான் குர்ஆன் மஜீதை மொழிபெயர்த்து வெளியிடத்துணிந்து நின்றதைக் கண்டு, அனைவரும், "அது காதியானி குர்ஆன்; ஆகையால், நாங்கள் சு. ஜ. குர்ஆனை வெளிப்படுத்துகிறோம்," என்று கூறிய சிற் சிலர் அங்கங்கே காளான்களேபோல் கிளம்பினர்கள். அவற்றிற்கெல்லாமும் ஆதரவில்லாதுபோய், அதி ஜல்தியில் அழிந்தொழிந்து போய்விட்டன. யான் முன்னமே சொன்னவாறு, மௌ. முஹம்மதலீ மர்ஹூம்-கூத்தானல் லூர்வாசி—திரிச்சி ஜனுப் ந. மு. காஜாமியான் ராவுத்தரிடம் ஒரு கோஷ்டியுடன் சென்று, சு. ஜ. குர்ஆனை வெளியிடுமாறு வேண்டினர். அப் பெரியாரும் இம் முல்லாக்களின் நய வசனங்களை நம்பி மோசம் போயினர்: ஒரு சில "மவுலவீகள்" என்னப்பட்டவர்களும், சிற் சில "தமிழ்ப்பண்டிதர்" என்னப்பட்டவர்களும் அவர்பால் சென்று குழுமினர்கள். அப் பெரியாரின் உதார குணத்தைச் செவ்வனம் உபயோகித்துச் சம்பிரமமாய் இரண்டாண்டுகள் முடியச் சாப்பிட்டார்கள்; செவ்வனம் சுகித்தார்கள். மவுலீகளுக்குள்ளே தமிழில் தர்ஜுமா செய்ததில் சச்சரவு; பண்டிதர்களுக்குள்ளே தமிழ்மரபு விஷயத்தில் சண்டை ஆகவே, பலகாலும் கஷ்டப்பட்டு, அத்திரிச்சிப் பெரியாரின் சர்வ தாராளப் பொருட் செலவிலே—ரூ. 50 ஆயிரம் என்று எனக்குக் கேள்வி—ஏதோ ஒரு சிறு குர்ஆன் பகுதியை, மத்ரஸ் மவுலவீ மொழியிலே, ஏதோ வொருவித வியாக்கியானத்துடனே வெளியிட்டார்கள்; அது திருச்சி மஜ்லிஸுல் உலமா சபையால் வெளியிடப்பட்டதென வெளியில் பிரசாரமும் புரியப்பட்டது. பயன் எதுவுமே விளையவில்லை. ஆகையால், ஜனுப், ந. மு. கா. அவர்கள் மிக்க மனமுடைந்து, வெறுப்புற்று, அம் மொழிபெயர்ப்பு வேலையை அவ்வளவுடனே நிறுத்தி முடித்துவிட்டார்கள். பிறகு இது குறித்து யான் அப் பெரியாரைச் சென்னை அங்கப்ப நாய்க்கன் தெருவிலுள்ள அவரது மாளிகையில் கண்டு பேசியபொழுதுதான் அவர் கூறினர், இத் தென்னட்டிலுள்ள எந்த



ஒரு மவுலவீயுமே குர்ஆனைத் தமிழில் சரியாக மொழிபெயர்த்து ஒழுங்கான விரிவுரையுடனே வெளியிட அருகதை பெற்றில்லையென்று. இப் பெரியார் குர்ஆன் 30 பாகங்களில் ஒரு பாகத்திற்கு ஈராண்டுகள் மட்டும் பல பாக்கவீகளையும் பற்பல பண்டிதர்களையும் வைத்து ரூ. 50 ஆயிரம்வரை செலவு செய்திருக்க, யான் எந்த மவுலவீயின், எந்தப் புலவரின் உதவியுமில்லாது, சில்லாயிரம் ரூபாய்ச் செலவில் மூன்று பாகங்களை விரிவுரையுடனே வெளியிட்டு முடித்தது பேரற்புதமாயே யிருந்துவருகிறது. எல்லாம் அல்லா(ஹ்)வின் நாட்டமேயாம் !

ஜனுப், ந. மு. கா. அந்தக்குர் ஆன் மொழிபெயர்ப்புக் கும்பலைக் கலைத்துத் துரத்திய பின்னர் அந்த "ஆலிம்"களும், "புலவர்"களும் எங்கெங்கோ தெறிபட் டோடினர்கள். ஒரு "பாக்கவீ" கூத்தானல்லூர் சென்று, மௌ. முஹம்மதலீ (மர்ஹூம்) இடத்தே அடைக்கலம் புக்கார். அவர் இந்த "பாக்கவீ"யை அவ்வூர் சாந்திப் பிரகடன சபையின் ஆதரவின் கீழே சு. ஜ. குர்ஆன் ஷரீபைத் தமிழில் மொழிபெயர்க்க ஏற்பாடு செய்து வைத்தார். அது தெரிந்து, அச்சபையில் நெருங்கிய தொடர்பு வைத்துக்கொண்டிருந்த எனதாப்த நண்பருடனே யான் சென்னைத் திருவல்லிக்கேணி "மௌரீனு பீச்"சில் ஒருநாள் மாலையில் சம்பாஷிக்க நேர்ந்தக்கால், அவர்களூர் சாந்திப்பிரகடன சபை ஏன் ஆயிரக்கணக்கான ரூபாயை அள்ளியிறைத்து இம்மொழிபெயர்ப்பைச் செய்யவேண்டும்? ஊருக்கூர் ஏன் வெவ்வேறு தர்ஜுமா செய்ய முற்படல் வேண்டும்? குர்ஆனை மொழிபெயர்த்து விரிவுரை காண்பது அத்துணை எளிதன்றே; வெவ்வேறு சபையார் வெவ்வேறு விதத்தில் பல்லாயிரக்கணக்கான ரூபாய்களை வீண் விரயம் செய்து, தங்களூர்த் "திருமறைத் தமிழுரை" போன்ற சரியான மொழிபெயர்ப்பல்லாத, செந்தமிழ் வாசகமாயில்லாத ஒரு மொழிபெயர்ப்பை ஏன் வெளியிடமுயலவேண்டும்? இதனைவிட்டு, ஏன் எல்லாரும் ஒருமுகமாய்த் திரண்டு ஜவாஹிருல்புர்க்கானையே முடிவுற மொழிபெயர்த்து வெளியிடக்கூடாது? என்று விநய பூர்வமாய் வினவினேன். இதற்குஎன் நண்பர் ஒரு பாதி வேடிக்கையாகவும், மறுபாதி விநயமாகவும் இவ்வாறு விடையளித்தார்: "இல்லை, பாயி! பலபேர் பலவிதத்தில் மொழிபெயர்த்து வெளியிட்டால்தான், அப்பால் இத்தமிழுலகு தங்கள் ஜவாஹிருல் புர்க்கானின் உண்மைப் பெருமையை உள்ளவாறு உணரத்தலைப்படும்." அல்லா(ஹ்) வின் திருமறையை மொழிபெயர்ப்பதென்பது 'அல்புலைலா வ லைலா' வென்னும் அரபுநாட்டுக்கதையை, அல்லது "கஸஸுல் அன்பியா" வென்னும் புராணக் கதையைத் தமிழில் வரைந்து வெளிப்படுத்துவதுபோன்ற எளிய காரியமென்று எண்ணினரோ, என்னவோ? எனக்கது தெரியாது. அவ்வேலையில் அவருடைய அண்ணன் மகன் முக்கியஸ்தரா யிலங்கினர்.

சாந்திப் பிரகடன சபையும், சையான் மவுலவீ சாஹிபும், ஸை. இ. மவுலவீ சாஹிபும், உத்தம பாளையம் "பாக்கவீ"யும் ஒருங்கு சேர்ந்து குர்ஆன் மஜீதின் முதற்பத்துப் பாகங்களை ஒருவாறு அச்சிட்டு வெளியிடலாயினர்கள். அதனைத் திறந்துவைக்க, "சு. ஜ. முல்லாக்களெல்லாம்" ஒருமிக்கத் திரண்டு, ஒரு "குர்ஆன் திறப்பு மகாநாடு" என்ற நாமத்துடனே மிகப்பணம் செலவு செய்து, கூத்தானல்லூரிலே கூட்டினர்கள். அதற்குத் தலைமை தாங்கச் சென்னையிலிருந்து "சவுக்கார் (நவாப்கூட) சி. அப்துல் ஹக்கீமை" அழைத்துச்சென்றார்கள். * வேலூரிலிருந்து "பாக்கவீ"களை வெறுமனே உற்பத்தி செய்தனுப்பும் "பாக்டரி"யின் தலைவர் ஆலாஹஜ்ரத், ஹாஜீ, முஹம்மத் ஜியாவுத்தீன் சாஹிப் (மர்ஹூம்), ஸை. இ. மவுலவீ (மர்ஹூம்) ஆதிய அநேக முல்லாக்களெல்லாம் சென்று அவ்வூரில் "குடில"மிட்டனர்கள். எல்லாம் ஏகபோகச் சிறப்புத்தான்; எல்லாம் எக்களிப்புத்தான். செம்மையாய்ப் புசித்தார்கள்; நன்றாகச் சுகித்தார்கள். செல்வாக்குச் செல்வர்கள் சிறப்புச் செய்தார்கள். தமாஷாக்களெல்லாம் வெகுஜோர்தான்; தர்ஜுமா வேலையோ, அவ்வளவுடனே அஸ்தமித்து ஆகாயம் ஏகிவிட்டது. சாந்திப்பிரகடன சபையாரின் ஊற்றமும் உற்சாகமும் பதினோராவது பாகம்—யஃததிருன இலைக்கும்—என்பதன் ஆரம்ப ஆறு ஆயாத்துடனே ஆவியாய்ப் பரிணமித்துப் பறந்து போய்விட்டது. எஞ்சிய பாகங்களை இத்தமிழ் நாடு 15—8—1934 முதல் எதிர்பாத்தே நிற்கிறது.

(தொடரும்)

* இறந்தவரைக் குறித்து யாதொன்றும் இழித்துக் கூறத் துணியேன். எனினும் இந்த சி. அப்துல் ஹக்கீம் ஒரு பக்கா "வஹ்ஹாபி"யாயிருந்தார் என்பதையும், இவரது சொந்தவித்தை எவ்வாறிருந்துவந்த தென்பதையும் இத் தமிழுலகம் நன்கறிந்தே யிருந்தது. இனி வேறென்ன சொல்லக் கிடக்கிறது ?



# திருட்டுக்குக் கையைத் தறித்தல்

திருட்டுக்குற்றவாளிக்குக் கைம்மணிக் கட்டுக்களைத் தறித்துவிட வேண்டுமென்பது குர்ஆன் கட்டளை. இதனைச் செவிமடுத்த வுடனே சிலர் துள்ளிக் குதித்து "அக்கிரமம்! அநீதி!!" என்று கூச்சலிடுவர். இக்கூறிய குர்ஆன் கட்டளையில் அக்கிரமமோ, அநியாயமோ எதுவுமேயில்லை. ஆயின், அஃதொரு கடின தண்டனையேயாம். திருட்டுக் குற்றத்துக்கு ஏன் இத்துணைக் கடின தண்டனையென நீங்கள் வினவத்துணியலாம். திருட்டென்பது மக்கட் சமுதாயத்தில் சர்வ சாதாரணமாய் இதுகாலை நாடோறும் நடைபெற்று வருகிறது. எனவே, இஃதொரு சமுதாயப் "பிளேக்" நோயென்றே கொள்ளப்படலாம். திருட்டென்னும் இப் பொல்லாத "பிளேக்" நோயால் மனிதன் "நிம்மதி"யாய் வாழ்வதற் கில்லை; தெருக் கதவையும், கொல்லைக் கதவையும் தாழக்கோலிட்டு விட்டோமேயென நிச்சிந்தையாய் இரவில் தூங்குவதற்கில்லை; "கடையைக் கட்டிப்" பூட்டுப்போட்டு விட்டுச் சென்றாலும், பயமே. வீட்டைப் பூட்டி இரவில் திருடர் பயமே. வீட்டைப் பூட்டி விட்டு வெளியூர் சென்றால், அது காலைப் பூட்டிய வீட்டுள்ளே கன்னக்களவு. பொலீஸ் உத்தியோகஸ்தர் பங்களாக்களிலுங்கூடப் பகிரங்கத் திருட்டு. பாங்கிலே கொள்ளை; பாங்க்குக்குப் பணங்கட்ட வருவாரும், பாங்கிலிருந்து பணம் வாங்க வருவாரும் பகற் கொள்ளையடிக்கப் படுகிறார்கள். அம்மம்ம! திருட்டு, திருட்டு, திருட்டு. எங்குப் பார்த்தாலும் திருட்டே!

அத் திருட்டுக்களேயன்றி, "ஜேபடிக்காரர்" (pick-pockets) தொல்லை மாபெருந்தொல்லை. ரயிலில் ஜேபடி, பிளாட்பாரத்தில் ஜேபடி, ட்ராம் வண்டியில் ஜே படி, சினிமாக்கொட்டகையில் ஜேபடி, சைனபஜாரில் ஜேபடி! பலே பலே கெட்டிக்காரப் பேர்வழிகளும் ஜேபடிக்காரரிடம் அகப்பட்டு ஆயிரக்கணக்கில் பறிகொடுத்துப் பரிதபிக்கிறார்கள். "ஜேபடிக்காரர், ஜாக்கிரதை!" (Beware of pick-pockets!) என்ற நோட்டீஸ் எல்லா ரயில் வண்டிகளிலும், இன்னும் பற்பலவிடங்களிலும் ஒட்டப்பட் டிருப்பதைக் காணலாம்.

எனவே, அத்தகைய திருட்டும் கொள்ளையும் எத்தகைய சமுதாய சுகவாழ்க்கையைக் கெடுத்துத் தொல்லையை விளைக்கின்றன வென்பதைச் சொல்லொணாது, சொல்லொணாது, சொல்லணுதுகாண். திருடர்களுக்கும் கொள்ளைக்காரர்களுக்கும் இலேசான சிக்ஷை விதிப்பதனாலேதான் இவ்வளவு அதிகமான திருடர்களும், கொள்ளைக்காரர்களும் இதுகாலை இப்புவியினில் தலைவிரித்துத் தாண்டவமாடி வருகிறார்கள். யானை இருந்தாலும் ஆயிரம் பொன், இறந்தாலும் ஆயிரம் பொன் என்பார்களே, அதேபோல் திருடர்கள் தப்பியோடி விட்டாலும் இலாபந்தான்; அகப்பட்டுக் கொண்டாலும் அரசாங்க விருந்தினராய்ப் பல மாதம் காவலிலே கௌரவமாய்க் காலங் கழிக்கிறார்கள்.

மீக்கூறிய சமூக துரோகிகளைச் சரியான முறையில் கைகளைத் தறித்து விடுவதென்றால், அப்பால் எத்தனை பேர் திருடுவார்கள், கொள்ளையடிப்பார்கள் என்று எண்ணுகின்றீர்கள்; இக் கடுந்தண்டனையை விதிப்பதென்றால், ஒரு சில திருடர்கள் முதன் முதலில் தங்கள் கரங்களை நறுக்கப் பெறுவார்கள்; அப்பால் அத் திகிலால் ஏனையவரெல்லாம் எச்சரிக்கை பெற்று விடுவார்கள். கையிழந்த கள்வர்களைக் காணுங்கால் பொதுமக்கள், "இவர்கள் திருடர்கள், ஜாக்கிரதை!" என்னும் எச்சரிக்கையைப் பெற்று, உஷாராய் விடுகிறார்கள். எனவே ஏதோ கொஞ்சம் பேர் கைகள் துணிக்கப்படுவதுடனே ஒரு பெரிய சமுதாயத் தீங்கு முடிவடைந்து விடும்; எடுத்துக்காட்டாக, இப்னுசுஊத் அரசாங்கத்தைப் பாருங்கள். அந்த ராஜ்யத்தில் திருட்டென்பதே ஒரு சிறிதும் கிடையாது அந் நாட்டிலும், எகிப்திலும் கம்யூனிஸ்ட் தொல்லைகளும் கொள்ளைகளும் சிறிதும் தலை காட்டமாட்டா. எனவே, இஸ்லாமிய முறைப்படி ஆட்சி நடப்பதாயின், இப் பாருலகினில் ஒரே வாரத்தில் களவு கொள்ளை கம்யூனிஸ்ட் தொல்லைக ளெல்லாம் இருந்தவிடம் தெரியாது இரிந்தோடிவிடும். குர்ஆன் ஷரீபின் சட்டம் இன்னதென்றறியாத, அறிய முயலாத நாத்திகர்கள் அந்தக் குர்ஆன் இந்த 1952-க்குப் பொருந்தாதென்று உளறிக் கொட்டட்டும். ஆயின், அத் தெய்வத் திருமறையி லுள்ள என்றுமழியாச் சட்டதிட்டங்களைப் பின்பற்றியொழுக இத்தரணி மாந்தர் துணிந்தெழுந்தால், ஒரே திங்களில் இப் புவனலோக வாழ்க்கையைச் சுவனலோக வாழ்க்கையாக மாற்றியமைத்துவிடலாம். இதனை இக்குவலய மாந்தரனைவரும் பரீக்ஷித்துப் பார்க்கத் துணிவரா?





# வியபிசாரத்தில் ஆணும் பெண்ணும் சரிசரிக் குற்றவாளிகளே

"சேற்றைக் கண்டால் மிதிப்பான்; தண்ணீரைக் கண்டால் கழுவுவான்; அவனுக் கென்னடி?" என்பதொரு தமிழ் நாட்டுப் பழமொழி; இதன் கருத்து, ஆண்மகனொருவன் கண்ட கண்ட பெண்களுட னெல்லாம் கள்ளப்புணர்ச்சி செய்வான், அப்பால் எல்லாவற்றையும் தொலைத்துத் தலை முழுகிவிட்டு, நல்ல மனிதனேபோல் நடிக்கலாம், என்பதா யிருக்கிறது. வியபிசார மென்பது சமுதாய மக்களின் சத்தொழுக்குக்குப் பெரியதோர் இழுக்கை விளைக்கக் கூடியதா யிருக்கிறதென்னும் உண்மையை அனைவரும் அங்கீகரிப்பர்; ஆனாலும், ஆண்கள் புரியும் வியபிசாரம்—"ஜினா"—சர்வசாதாரணமாயே இக்குவலய மக்களால் மதிக்கப்பட்டு வருகிறது. பொதுப்படையாய் நோக்குமிடத்து, பெண்கள் புரியும் வியபிசாரமே மாபெருங் குற்றமெனக் கருதப்படுகிறது. "மாமியார் உடைத்தால் மட்குடம், மருமகள் உடைத்தால் பொற்குடம்" என்னுமாபோன்று, பெண்கள் "ஜினாவே" பெரியதோர் இழுக்காம்; ஆனால், ஆண்கள் "ஜினா" அத்துணைப் பெரிய குற்றமுள்ள செய்கையன்றென்றே கொள்ளக் கிடப்பது வெள்ளிடை விலங்கலேயாம்.

ஆயின், இஸ்லாம், கள்ளப் புணர்ச்சியை—"ஜினா"வை—ஆண்பெண் இரு பாலாருள் எவர் புரிந்தாலும் மாபெருங் குற்றமென்றே இயம்பிவிட் டிருக்கிறது. "ஜினா" வென்னும் வியபிசாரக் குற்றத்திற்கு நூறடி தோற் சாட்டையால் பீஷ்டத்தில் கொடுக்குமாறு குர்ஆன்மஜீத் கூறிக்கொண்டிருக்கிறது. இவ்வாறு பீஷ்டத்தில் நூறடி கொடுப்பதிலே ஆணும் பெண்ணும் சரிசரிக் குற்றவாளிகளாகவே கருதப் படுகிறார்கள். வியபிசாரக் குற்றத்துக்கு ஆண் அல்லது பெண்ணென்ற வேறுபாடு காணப்படாததேபோல் பணக்காரர் ஏழையென்ற வித்தியாசமும் இஸ்லாத்தில் கிஞ்சித்தும் பாராட்டப் படுவது அறவே கிடையாது. "பணக்கார வியபிசாரி பந்தியிலே, ஏழை வியபிசாரி சந்தியிலே," என்னும் பழமொழிக்கு இஸ்லாத்தில் இடமேயில்லையென் றறிக.

இந்நவ நாகரிக(?) உலகினில் வியபிசாரம் ஒரு சர்வசாதாரணக் குற்றமென்றே மதிக்கப்பட்டு வருவதனாலேதான் இக்குவலய முழுதும் இதுகாலை "ஜினா" வென்பது முகடு முட்டிப்போய்க் கிடக்கிறது. மக்களின் ஒழுக்கத்தை இழுக்கடையச் செய்வது இந்த "ஜினா"வாகவேயிருந்து வருகிறது. பொதுவாக மேனாடுகளிலும், அவற்றைப் பின்பற்றியொழுகும் கீழ்நாடுகளிலும் இது காலை வியபிசாரமென்பது சர்வதாராளமாயே துணிவுடன் புரியப்பட்டுவருகிறது. இஸ்லாமிய சட்டப்படி முஸ்லிம் வியபிசாரர்களுங்கூடத் தண்டிக்கப் படுவது இது பொழுது கிடையாது; இக்காலச் சீர்கேடான, தலைகீழ் வாழ்க்கையில் வியபிசாரக் குற்றம் ஒரு பெரிய ஒழுக்க இழுக்குக் காரண பூதமென்று சமுதாயமும் தீர்ப்புக் கூறாது, பராமுகமாகவேயிருந்து வேடிக்கைபார்த்து வருகிறது. இன்னம், இக்கால உலகாயத, நாத்திக உலகினில் "கடவுளாவது கத்தரிக்காயாவது?" என்றும், "சமுதாயமாவது, கிமுதாயமாவது?" என்றும் வினவத் துணிந்து விட்டனர், அநேகமா பெல்லாரும். இற்றை நாளுலகில் வயிறு வளர்ப்பதொன்றே இகலோக வாழ்க்கையின் முக்கிய குறிக்கோளா யிருக்கிறது; எனவேதான், இக்காலமக்கள் ஒழுக்கத்தைப் பற்றி ஒருசிறிதும் கவலை கொள்ளாது, உண்ணவும், உடுக்கவும், உறங்கவுமே பற்றாது, பற்றாது, பற்றாதெனப் பதைபதைத்துப் புழுவாய்த் துடிக்கின்றனர். இக்காரணத்தினாலேயே மேனாட்டு நாரிமணிகள் ஓரிரவு படுக்கைக்காகவும், போஜனத்துக்காகவும் ஒரு சில அணாக்களுக்காகத் தங்கள் கற்பை விற்று வருகிறார்கள். அம்மேனாடுகளில் பொருளாதார நிபுணர்கள் பொது மக்களின் வயிற்றுப் பசிக்குக் கால் வயிற்றுக் கஞ்சிக்கு வழி செய்தால், போதுமென்றெண்ணுகிறார்கள்; ஆங்குள்ள தத்துவ ஞானிகள் அம்மக்களின் ஒழுக்கத்தை எவ்வாறு விழுப்பமடையச் செய்வதென ஒரு வழியும் புலப்படாது திகைத்து நிற்கின்றனர்.

இஸ்லாம் மார்க்கமோ, ஆத்ம சுகிர்தத்தையே முதன்மையாய்க் கருதி, ஒழுக்கத்தையும் ஒழுங்கு செய்து வைப்பதாயிருக்கிறது. இதற்கு வேண்டிய உதாரணங்

(28-ஆம் பக்கம் பார்க்க)

# அரபி சமய - சமுதாய சீர்திருத்தக்காரர்கள்

வஹ்ஹாபி யியக்கம் கி. பி. 19-ஆவது நூற்றுண்டு மத்தியிலே நஜ்திலிருந்து சிரியா நாட்டுள்ளே பரவத் துவக்கிற்று. அவ்வியக்கம் அரபிபருலகு முழுதுமே மிக எளிதில் பரவி விட்டிருக்கும்; ஆனால், அரப் நாட்டிலே அது வன்மையாய் வேரூன்றியவுடனே, அவ்வியக்கம் அரசியற் போராட்ட இயக்கமாக உரு மாறத் தலைப்பட்டு விட்டமையால், அதுகாலை அரப்நாட்டை ஆண்டு வந்த உதுமானிய (துருக்கி) அரசாங்கத்தினர் அவ்வியக்கத்தை மிகக் கடுமையாய் எதிர்த்துத் தகைபத் துணிந்தெழுந்தனர். அவ்வாறு அரசியற் கொள்கை நிரம்பிய அந்த வஹ்ஹாபி யியக்கம், ஏற்கெனவே இஸ்லாத்தில் இருந்துவந்த 4 மதுஹபுகளுடனே 5-ஆவது மதுஹபாய் (இதனை "லாமதுஹப்" என்பர் அந் நால்வரும்) ஆக்கப்பட்டுவிட்டது.

சென்ற மூன்று தலைமுறைகளில் தோன்றிய சீர்திருத்த வாதிகளுள் முக்கியமான மனிதர்கள் மூவர்களாவார்கள்; அவர்கள், ஜமாலுத்தின் அல் அப்கானி, அஷ் ஷெய்க் முஹம்மத் அப்துஹ், ரஷீத் ரிதா என்னப்படுவார்கள்.

## ஜமாலுத்தீன் அல் அப்கானி

ஜமாலுத்தீன் அல் அப்கானி என்னும் மேதைப் பெரியார் அப்கானிஸ்தானில் கி. பி. 1838-இல் அவதரித்தார். முஸ்லிம் உலகில் மத சம்பந்தமாகவும் அரசியல் சம்பந்தமாகவும் ஒரு நவீனப் புத்துணர்ச்சியைக் கிளப்பி விட வேண்டு மென்பதே இப் பெரியாரின் பிறவி யிலக்ஷியமா யிருந்துவந்தது. ஆனாலும், முஸ்லிம் நாடுகள் ஐரோப்பாவின் ஆதிக்கத்தின் கீழோ, அல்லது வேறு அன்னிய நாட்டு ஆதிபத்தியத்தின் கீழோ அடங்கி யிருந்துவருமட்டும் இம் முஸ்லிம்கள்பால் மத சீர்திருத்தவுணர்ச்சியை உண்டுபண்ணிவிடுவது சாலா தென்றே இப் பெரியார் திண்ணிதா பெண்ணினுர். எனவே, இவர் எல்லா முஸ்லிம் நாடுகளையும் ஒரே கிலாபத்தின் கீழே கொண்டுவந்து இணைக்கலாமென நாடினுர்; அப்பொழுதுதான் கீழைநாடுகள் மீது மேலை நாட்டார் கொண்டுநின்ற ஆக்கிரமிப்பை வெற்றியுடனே எதிர்க்க இயலுமென எண்ணத் துணிந்துவிட்டார்.

ஜமாலுத்தீன் ஒரு சிறந்த (விரிந்த) கல்விமானுகவும், உயர்ந்த மதாசாரியராகவும், முதற்றர அரசியற்றலைவராகவும் இருந்துவந்தபோதினும், இவரது முயற்சியனைத்தும் அரசியற் போராட்டத்திலேயே முழுமையாய்ச் செலுத்தப்பட்டுவந்தது. கீழ்நாட்டு விஷயங்களில் மேனுட் டைரோப்பியர்கள் தலையிடுவது குறித்து இப்பேரறிஞர் நெருப்புத் துணுக்கான கட்டுரைகளை வரைந்து வரைந்து தள்ளினுர். இவர் முஸ்லிம் மன்னர்களையும் மிஞ்சி நிற்க விட்டனரில்லை; அவ்வரசர்கள் ஐரோப்பிய வல்லரசுகளுக்கு "ஸுஜூத்"—அஷ்டாங்க அடிபணிதல்—செய்துவந்ததை இவர் வாளா பார்த்துக் கொண்டிருக்கப் பொறுக்கவில்லை.

ஜமாலுத்தீன், தம்முடைய கிளர்ச்சியை அதிகம் வேண்டி நின்ற எகிப்துக்கு 1871-இலே விஜயம் செய்து, அங்குத் தமது காரியத்தை மிகத் தீவிரமா யாரம்பித்தார்; இவர் அந் நாட்டுப் பல்வேறு திறப்பட்ட மக்கள் களிடையே செய்துவந்த அரசியற் பெருங் கிளர்ச்சிகளால் எகிப்திலே அதுகாலை அரசு செலுத்திவந்த, பலஹீனமுற்றுக் கிடந்த (ஆனால், கொடுங்கோலே நடாத்திவந்த) அரசாங்கம் திகில் கொண்டுபோய், ஓர் அன்னிய (ஆங்கில) அரசாங்கத் தூண்டுதல் மீது ஜமாலுத்தீனை 1879-இல் நாடுகடத்தி விட்டது. எனவே, இப் பெரியார் இந்தியாவுக்கு வந்து, தக்ஷிண ஹைதராபாதையே தமக்குரிய உறைவிடமாகத் தேர்ந்தெடுத்துக் கொள்வாராயினுர். அப்பால் அந்த எகிப்துநாட்டில் ஐரோப்பியராதிக்கம் அளவுமீறி அந்நாட்டுக் காரியாலயங்களில் அதிகம் தலையிடத் துவக்கியதன் பயனுய் அறபி பாஷாவின் தலைமையின் கீழே அரசப் புரட்சிக்கலகம் அங்கே கிளம்பி விட்டமையால் இந்தியாவிலிருந்த பிரிட்டிஷ் அரசாங்கம் ஜமாலுத்தீனை ஹைதராபாத்திலிருந்து கல்கத்தாவுக்குச் சென்றுவிடுமாறு கட்டளை பிறப்பித்தது.

1882—இல் எகிப்து இறுதியிலே பிரிட்டிஷார் கைவயம் வந்தமர்ந்த பின்னர், இந்தியாவின் பிரிட்டிஷ் அரசாங்கம் ஜமாலுத்தீனைச் சுயேச்சையாய் அவிழ்த்துவிட்டது. ஆகவே, அவர் ஐரோப்பா சென்று, பாரிஸ் நகரிலே தங்கியிருந்துகொண்டு **அல் உர்வத்துல்வுத்கா** (பிரிக்க முடியாப் பிணிப்பு) என்னும் சஞ்சிகையை, முஹம்மத் அப்துஹ் என்பவரின் உதவிகொண்டு ஆரம்பித்தார். 1884-இல் எட்டு மாத காலமே அது நடைபெறலாயிற்று; அதுபொழுது 18 சஞ்சிகைகளே பிரசுரிக்கப்பட்டன. எனினும், அச் சஞ்சிகைக்கு ஏராளமான சந்தாதாரர்கள் சேர்ந்தார்கள்; மேலும், அதனுல் விளைந்த பயன் நிரந்தரமாகவே நிலைநிற்கலா யிற்று.

மத அபிப்பிராயத்தில் ஜமாலுத்தீன் ஸுன்னிகளுக்கும் ஷீஆக்களுக்கும் நடுவே வேற்றுமை சிறிதும் கொண்டு நின்றது கிடையாது. இதனுல் இவர் அகில உலக இஸ்லாமிய இயக்கத்து (Pan-Islamic Movement) -க்கு உரிய ஒப்புயர்வற்ற செயலாற்றுநரா யிலங்கி வந்தார். ஜமாலுத்தீனின் கிளர்ச்சி ஓரொரு முஸ்லிம் நாட்டிலும் ரீங்காரம் செய்யத் துவக்கிற்று; ஆயின், அவரது, இயக்கத்துக்குரிய எதிரொலி இந்தியாவிலேதான் மிகவதிகம் கிளம்பலாயிற்று. இவரே நவீன முஸ்லிம் விழிப்புக்குரிய மூலபிதாவா யிலங்கி வருகிருர் என்பதில் ஐயமில்லை.

## முஹம்மத் அப்துஹ்

மத சீர்திருத்தத்திலும் அரசியல் சீர்திருத்தத்திலும் (ஆகியவிரண்டிலும்) அளவிறந்த செல்வாக்குப் பெற்று, ஜமாலுத்தீன் அப்கானீயின் பிரதம (பிரிய) சிஷ்யராய் விளங்கியவர் ஷெய்க் முஹம்மத் அப்துஹ் என்னும் பெபர் போன பெரியாராயிருந்தார். இவர் ஓர் எகிப்து வாசி; கி. பி. 1849-இல் பிறந்தவர். இவர் தங் குருநாதருடன் கூடி, **உர்வத்துல் வுத்கா** என்னும் சஞ்சிகையை நடாத்திய போதினும், மதசீர்திருத்தமே இவருக் குகந்த பணியா யிருந்து வந்தது. ஜமாலுத்தீனும், அப்துஹும் நாடு கடத்தப்பட்ட பின்னுல், இப்பின்னவர் மத சீர்திருத்தத்திலேதான் முழுக்க முழுக்க ஈடுபட் டுழைக்கலாயினுர்.

ஷெய்க் முஹம்மத் அப்துஹ் இஸ்லாத்தில் இப்னு தைமிய்யாவின் அடிச்சுவட்டைப் பின்பற்றுகிறவரா யிருந்தார். இப்னு தைமிய்யாவைப் போலே இச்சீடரும் மத விஷயத்தில் பிராசீன மௌட்டியக் கொள்கைகளை யெல்லாம் எதிர்த்துப் போர்புரிய லாயினுர்; இவர் காலத்திலிருந்த (பழம் பித்துப் பிடித்து நின்ற) மௌலானு மௌலவீகளையும் முஹம்மத் அப்துஹ் சும்மாவிடவில்லை. பண்டைக் கொள்கைகளையும், பண்டை முல்லாக்களையும் இப் பெரியார் ஒரு சேரவே தாக்கி வருவாராயினுர். **பித்அத் ஷிர்க் போன்றவற்றை**யெல்லாம் இவர் மிக வன்மையாய்க் **கண்டித்த**துடன், தமதியக்கத்தை எதிர்த்து **நின்ற முல்**லாக்களே இஸ்லாமிய பரிசுத்த **வாழ்க்கை**யினின்று முஸ்லிம்கள் இழிந்து கிடப்பதற்குக் காரண பூதமென்றும் வலியுறுத்திக் **கூறினுர்.** சமாதி பூஜைகளையும், அவற்றுள்ளே அடங்கியுறங்கும் அவ்லியாக்களை வணங்கித் தொழும் ஆசாமி பூஜையையும் ஷெய்க் முஹம்மத் அப்துஹ் ஒரு சிறிதும் தயை தாக்ஷிண்யமின்றி மிக வன்மையாய்க் **கண்டித்துவந்தார்.** "உண்மை இஸ்லாத்தின்பக்கலே ஓடிவாருங்கள்!" என்று இவருக்கு முன்னுலிருந்த மாபெருஞ் சீர்திருத்தக்காரர்கள் **கூவிய** குரலையே இப் பெரியாரும் **கூவி யழைத்துக்** கொண டிருந்தார்.

இஸ்லாத்தைக் குறித்து ஐரோப்பிய (கிறிஸ்துமதப்) பாதிரிமார்களாலும், அம் மேனுட்டு அரசியல் வாதிகளாலும் வரைந்து வெளியிடப்பட்டுவந்த தாக்குதல்கட் கெல்லாம் அப்துஹ் சரியான வாயாப்பும், செம்மையான ஜவாபும் அறைந்து வந்தார். ஹாஞெட்டாக்ஸ், ரெனுன் போன்ற கல்விமான்களும் தங்கள் கல்வியறிவைப் பாதிரிமார்களுக்குப் பக்கபலமா யிருக்குமாறு உதவி புரிந்துவந்தது கண்டு; அப்துஹ் அவ்வாசிரியர்களையும், அவர்களையொத்த படித்திருந்த பாதிரிமார்களையும் மிக்க வன்மையாய்க் கண்டிக்காது விட்டனரில்லை. அவர்காலத்தில் ஐரோப்பிய அரசியல் வாதிகளும், கிறிஸ்தவப் பாதிரிகளும் அந்தக் கண்டத்திலும், ஆபிரிக்காவிலும், ஆசியாவிலும் இஸ்லாம் மார்க்கத்தை நாலா பக்கத்திலும் மிக வேகமாய்த் தாக்கி இழிவு செய்து கொண டிருந்தார்கள்.

முஹம்மத் அப்துஹின் இஸ்லாம் மத சித்தாந்தச் சுருக்கம் அன்னுர் வரைந்துள்ள **ரிஸாலத்துத் தவ்ஹீத்** (ஏகேசுவரக் கொள்கை பற்றியுள்ள சஞ்சிகை) என்னும் பெயர்போன புத்தகத்திலே காணக்கிடக்கிறது. ஜமாலுத்தீன் அப்கானியைப் போலே முஹம்மத் அப்துஹ் தமது எழுத்துவன்மையைக் கொண்டே உயர்ந்தெழுந்தவ ரல்லர்; இப்பெரியார் தமது ஆஜானுபாகுவான பெருமிதத் தோற்றத்தைக் கொண்டும் தேஜஸைக் கொண்டுமே பெரும் புகழ் பெற்றுயர்வா ராயினுர். இவ ரெழுதிய **ரிஸாலா,** மத்திய கால மதக்கோட்பாட்டை எளிய முறையிலே இக் காலத்தவருக்கு விளங்க வைக்கு முறையிலே எழுதியிருக்கும் சஞ்சிகையா யிருக்கிறது. முஹம்மத் அப்துஹ் தங்கால இளவல்களுடனே நெருங்கிப் பழகி,

தமது தேஜஸ் மிக்க புத்தி சாதுரியத்தைக் கொண்டு, தாமெழுப்பிய சீர்திருத்த இயக்கத்துக்குப் பற்பல பெரும் பெரும் தலைவர்களை யெல்லாம் உற்பத்தி செய்து விட்டார். ஸஅத் ஜக்லூல் பாஷா போன்ற தலைவர்களெல்லாம் அவரது பிரசாரத்தின் பயனு யுபர்ந்தவர்களே யாவார்கள். சுருக்கிச் சொல்லுமிடத்து, முஹம்மத் அப்துஹ் அவர்காலத்து மக்களுக்கு வேண்டிய ஆசிரியராகவே விளங்கிவந்தார் என்றேதான் எழுதி முடித்தல் வேண்டும்.

## ரஷீத் ரிதா

அப்துஹின் சிஷ்யர்களுள்ளே ரஷீத் ரிதா என்பார் மாபெருங் கீர்த்தி வாய்ந்தவரா யுயர்ந்தெழுந்தார். ரஷீத் ரிதா 1856-இல் திரிப்போலியிலே (அதுபொழுது இது சிரியா நாட்டைச் சேர்ந்த நகரமாய் விளங்கி வந்தது) பிறந்தார். இவர் முஹம்மத் அப்துஹின் பிரிய சிஷ்யரா யிருந்தும், அவருடனே இவர் மிகவும் நெருங்கி அந்தரங்கத் தோழரா யிலங்கியுங் கூட, இந்த ரஷீத் ரிதா ஜமாலுத்தீன் அப்கானியின் கொள்கையையே பின்பற்றுவா ராயினர். எனவே, இவர் இஸ்லாமிய அரசியல் சீர்திருத்தத்தின் பக்கலே தமது கவனத்தை அதிகம் செலுத்தத் துவக்கினர். எனவே, இவர் கிலாபத் ராஜ்யத்தை மீட்டும் உயிர்த்தெழச் செய்துவிட வேண்டுமெனப் பெரிதும் பாடுபட் டுழைத்தார். இவர் கிலாபத் சார்பாய் மிகவதிகம் வரைந்து தள்ளினர்; அவற்றைப் படித்து ஐரோப்பிய ஆசிரியர்களும் இவருக்கு ஆதரவு கொடுக்க முற்பட்டுவிட்டார்கள். திமஷ்கில் வெளியாய்க்கொண் டிருந்த "இன் ஸ்டிட்டியூட் பிரான்ஸ்செய்ஸ்" என்னும் சங்கத்தின் தலைவர் ஹென்றீ லயௌஸ்ட்டென்னும் ஆசிரியர், ரஷீத் ரிதாவின் கிலாபத் சார்பாயுள்ள நூலை பிரெஞ்ச் பாஷையிலே மொழிபெயர்த்து, அப்புத்தகத்துக்கு "லெ கலீபேட் டான்ஸ் லெ டாக்ட்ரின் தெ ரஷீத் ரிதா" என்று நாமஞ் சூட்டினர். அவர் தமது கீர்த்திவாய்ந்த மொழிபெயர்ப்புக்கு ஒரு புத்திசாலித்தனமான முன்னுரையும் எழுதிச் சேர்த்துள்ளார். 1897-இலே ரஷீத் ரிதா "அல் உர்வத்துல் வுத்கா"வைப் பின்பற்று முறையிலே **அல் மனர்** (தீபஸ்தம்பம்) என்னும் நாமத்துடனே ஒரு மாசிகையை வெளியிடத் துவக்கினர்; இச் சஞ்சிகை இவரது மரண பரியந்தம் (1935) நடைபெற்றுவந்தது.

ரஷீத் ரிதாவின் முக்கிய மாபெரிய கிரந்தம், முஹம்மத் அப்துஹால் தொடங்கப்பட்ட குர்ஆன் மஜீத் வியாக்கியானத்தைப் பூர்த்தி செய்த தப்ஸீரா யிலங்குகிறது. ரஷீத் ரிதா மதக்கல்வியிலும் இஸ்லாமிய சட்டக் கலையிலும் மிக்க பண்பட்டிருந்தமையாலும், தற்கால சமூக சீர்திருத்தத்திலே அளவு மீறி ஈடுபட்டிருந்தமையாலும், நவீன ஸயன்ஸ் அறிவை அளவுக்குமேலே அருந்தி யிருந்தமையாலும், தாம்முடித்த அந்தத் தப்ஸீரிலே சமுதாய சீர்திருத்தங்களையும், ஸயன்ஸ் ஞானங்களையும் நிரம்பப் புகுத்திவைத்தார். இவர் இத்துணைப் பெரிய மகா கிரந்தத்தை வரைந்து முடித்தும், துரதிருஷ்டவசமாய், முஹம்மத் அப்துஹ் தம்முடன் பழகிய சாமான்ய மக்களுடன் சம்பாஷித்த எளிய சம்பாஷணத்தைக் கொண்டும், தம்முடைய மாணக்கர்களுடனும் கற்றறிந்த நண்பர்களுடனும், சிஷ்யர்களுடனும் பேசிவந்த சாதாரணப் பேச்சுக்களைக் கொண்டும் உண்டுபண்ணி வைத்த அத்தகைய ஆழிய செல்வாக்கை யொத்த செல்வாக்கொன்றைக் கிளப்பிவிட இயலாதவராய்ப் போய் விட்டார்.

## ஷக்கீப் அர்ஸலான்

அவ்வாறுய சீர்திருத்த வரிசையிலே தோன்றிய இனியொரு பெரியார் ஷக்கீப் அர்ஸலான் (1869-1946) என்பவரா யிருக்கிறர். ரஷீத் ரிதாவைப் போல இவரும் முஹம்மத் அப்துஹின் ஒரு பிரதம சிஷ்யராகவும், அரசியல் விவகாரத்தில் ஜமாலுத்தீன் அப்கானீயின் வழியைப் பின்பற்றியவராகவுமே யிருந்துவந்தார். இப்பெரியார் ரஷீத் ரிதாவைப் போன்று முஸ்லிம்களுக்குள்ளும் அரபிகளுக்குள்ளு மட்டுமே தமது செல்வாக்கை வைத்துக் கொள்ளாது, அச் செல்வாக்கை—அரபிகளிடத்து அபிமானம் பாராட்ட வேண்டுமென்பதை—மேனுட்டவரிடத்தும் பரத்தத் துணிந்தெழுந்தார். **லா நேஷன் அரபி** என்னப்பட்ட இவரது சஞ்சிகை (பிரெஞ்ச் மொழியில் பிரசுரிக்கப்பட்டது) ஸ்விட்ஜர்லாந்தியிலுள்ள ஜினீவா நகரினின்று 1930-இல் வெளிவரலாயிற்று; இது பல வருடங்கள்வரை விட்டு விட்டு வெளிவந்துகொண் டிருந்தது. இச் சஞ்சிகை அரபிகளுக்குப் பெரியதோர் உதவியே புரிந்துவந்தது. ஷக்கீப் அர்ஸலான் அரபிகளுக்கு இனியொருவிதத்திலும் உணர்ச்சியூட்டத் தலைப்பட்டார். லோத்ராப் ஸ்டோடார்டால்வரைந்து வெளிப்படுத்தப்பட்டிருந்த "இஸ்லாத்தின் புத்துலகம்" (**The New world of Islam**) என்னும் ஆங்கில நூல் அஜ்ஜாஜ் நுவைஹித் என்பவரால் அரபில் மொழிபெயர்க்கப்பட்டு, கெய்ரோவிலே 1925-இல் பிரசுரிக்கப்பட்டிருந்தது; இந்நூலுக்கு ஷக்கீப் அர்ஸலான் விரிவுரை வரைந்து, அவ்வரபிகட்கெல்லாம் பேருதவி புரிந்துவர லாயினர்.

சுருங்கச்சொல்லி விளங்கவைக்க வேண்டுமாயின், ஷக்கீப் அர்ஸலானுடைய சீர்திருத்த முயற்சியனைத்தும் துண்டு துண்டாய்ச் சிதறுண்டுபோய்க் கிடந்த முஸ்லிம் உலகுமுழுதும் மதசம்பந்தமாகவும் அரசியல் சார்பாகவுமுள்ள உணர்ச்சியைப் புத்துயிர் பெற்றெழச் செய்வதாயே யிருந்துவந்தது.

## அப்துர் ரஹ்மான் அல் கவாக்கிபி

19-ஆம் நூற்றுண்டின் பிற்பகுதியில் தோன்றிய ஒரு முக்கிய அரசியற் பெரியார் அப்துர் ரஹ்மான் அல் கவாக்கிபி என்பவரா யிருந்தார் (1849—1903). இவர் (சிரிய நாட்டு) அலெப்போவில் தோன்றினர்; இவர் அப்துஹ் தோன்றிய ஆண்டிலேயே பிறந்தார்; ஆனல், அவருக்கு ஈராண்டுகட்குமுன்னே இவர் (அ. க.) இறந்து போய்விட்டார். அல்கவாக்கிபி, ஜமாலுத்தீன் அப்கானியைப்போலே நிதானபுத்திவாய்க்கப் பெற்றவரா யிருந்தார்; ஆயின், அவரைப்போ லிவர் அரசியற்றுறையில் தீவிர வாதியாயிருக்க வில்லை. இப்பெரியார் அப்பெரியாரிடத்திருந்து சீர்திருத்த உத்வேகத்தை மட்டுமே பெற்றுக்கொண்டார்; ஆனல், அரசியற் கொள்கையில் இவர் தமக்கெனத் தனியான அபிப்பிராய முடையவராய் விளங்கிவர லாயினர்.

ஆனலும், அல்கவாக்கிபியின் செல்வாக்கு அதிக விஸ்தீரண முள்ளதாயில்லை; ஆதலால், அம் முஸ்லிம் உலகப் புத்துயிர் விழிப்பிலே இவருக்குப் பெரியதொரு சிஷ்யவர்க்கம் சிரேஷ்டமா யெழுந்துவிடாதுபோயிற்று. இதற்குக் காரணம் இவரது முறைகேடேயாகும்; இவர் இரகசியமுறையைக் கொண்டே தங் கருத்தை நிறைவேற்றச் சூழ்ச்சி செய்துவந்தார். எனவேதான் இவரால் எழுதப்பட்ட இருநூல்கள் வேறுமாறுபெயருள்ளவர் பெயரால் தேதி குறிக்காமலே பிரசுரிக்கப் படலாயின. இவர் எகிப்து நாட்டுக்கு ஹி1316-இலே (கி. பி. 1899-இலே) வந்து சேர்ந்தார்; ஒருகால் தம்மிருநூல்களையும் பிரசுக்கவே அங்கு வந்திருக்கலாம்.

அல் கவாக்கிபி வெளியிட்ட முதல் நூல் "கொடுங்கோன்மையின் தன்மையைப் பற்றி" யதாயிருந்தது. இந்நூலிலே, முஸ்லிம் உலகம் இதுகாலை வீழ்ச்சியுற்றுக் கிடக்கும் தாழ்ச்சிக்கெல்லாம் மூலகாரணம் இம்முஸ்லிம்களெல்லாரும் இஸ்லாத்தின் பரிசுத்த மார்க்கத்திலே நிலைத்து நில்லாது நெடுந்தொலைவிலே விலகி நிற்பதேயென்றும், இம் மக்கள் முன்னோர்கள் வகுத்து வைத்த நன் மார்க்கக்கொள்கைகளை மீறி வெளிப்பட்டுவிட்டதே யென்றும் விளம்பி யிருக்கின்றார். இன்னம், இம் முஸ்லிம் நாடுகளனைத்தும் அன்னிய ராதிக்கத்தின்கீழே அடிமைகளாயொடுங்கிக் கிடப்பதற்குரிய காரணம், இஸ்லாத்தில் பிறந்துள்ள பொதுமக்கள் அறியாமையிலும் வறுமையிலும் ஆழ மூழ்கிக்கிடக்கின்றமையால் இவ் விழிசனர் முஸ்லிம் மன்னர்களாலும் அன்னிய அரசர்களாலும் லஞ்சத்துக்கு வாங்கப்பட்டதானுமே என்று எழுதுகிறர். இனி இம்முஸ்லிம்கள் சுதந்தரமடையநாடிக் கொடுங்கோன் மன்னர்களின் எஃகுப் பிடியினின்று விடுபடுதற்கு வேண்டிய பற்பல வழிவகைகளை அல் கவாக்கிபி இந்நூலிலே எடுத்து விளக்குகிறர்.

இவர் இனியொரு நூலுக்கு உம்முல்குரு (மக்கமா நகருக்குரிய திருப்பெயர்) என்று நாமஞ்சூட்டியுள்ளார். இந்நூலிலே இவ்வாசிரியர், ஹி 1316, துல்கஃதா மாதத்தில் (கி. பி 1899, மார்ச்—ஏப்ரிலில்) திருமக்காவில் கூடியதாய்க் கருதப்படும் ஒரு மானஸ மகா நாட்டுக்கு விஜயஞ்செய்த பல்வேறு நாட்டு முஸ்லிம் பிரதிநிதிகளனைவராலும் நிறைவேற்றப்பெற்ற தீர்மானங்களும், முடிவுகளும், அவற்றிற்குரிய நடவடிக்கைகளும் (இவையனைத்தும் இவராலே மனத்தியானத்தைக் கொண்டு கற்பனையாகவே) எவ்வாறு பதிவு செய்யப்பட்டுள்ளனவென எடுத்தெழுதுகிறர். அத்தீர்மானங்களெல்லாம் அல்கவாக்கிபின் சொந்த அபிப்பிராயமேயாம். அவற்றுள் சில வருமாறு:—

(1) முஸ்லிம்களுக்குப் பொது ஜன விழிப்பையுண்டுபண்ணுவான் வேண்டி ஒரு கழகம் நிறுவப்பெறுதல் வேண்டும்.

(2) இக்கழகம் இருக்கவேண்டிய இடம் மக்கமா நகரமா யிருத்தல் வேண்டும்.

(3) இக்கழக வருடாந்தக் கூட்டம் திருமக்காவிலே ஹஜ்ஜின் காலத்தில் கூட்டப் பெறுதல் வேண்டும்.

(4) இச்சங்க அங்கத்தவராய சகோதர முஸ்லிம்களின் மகாவாக்கியம், "நாங்கள் அல்லா(ஹ்) ஒருவனுக்கே வணக்கம் செலுத்தக்கடவோம்," என்பதாயிருத்தல் வேண்டும்.

(5) இச்சங்க அங்க முஸ்லிம் சோதரர்களின் ஒழுக்கத்துக்கும் நடக்கைக்கும் குர்ஆன் ஷரீபும், சரியான (நம்பத்தக்க) ஹதீது ஷரீபு (நபிபெருமான் திருவாக்கியமு)மாயேயிருந்திடுதல் வேண்டும்; இஸ்லாத்தில் இது காலைக்காணக்கிடக்கும் பல்வேறு பிர்க்காக்கள் (உட்பிரிவுகள்) அடியுடனே அழித்தொழிக்கப்படல் வேண்டும்.

(6) முஸ்லிம் ஆட்சி முறை ஷூரு (அஃதாவது, புத்திமான்களின் பரியாலோசனை மீது நடத்தப்படும் ஜனநாக ஆட்சி) முறையாயிருந்திடுதல் வேண்டும்.

ரஷீத் ரிதா, ஷக்கீப் அர்ஸலான், அல்கவாக்கிபி யல்லாமல் வேறுபல சீர்திருத்தவாதிகளும் அரபியருலகினிலே தோன்றியுள்ளனர். ஆனால், அவர்களெல்லாம் ஓர் ஒழுங்கான திட்டத்தை வகுத்து வேலை செய்தனரில்லை; அவர்களுள் எவருமே முஸ்லிம் சீர்திருத்த ஊழியத்தைத் தமதாயுள் அலுவலாய் ஏற்று நடக்க வில்லை. எனவே, இந்த நூற்றுண்டின் ஆரம்ப முதல் இம் முஸ்லிம்களேபெல்லாம் ஒரு மிக்கத் திரட்டும் வேலை இந்திய நாட்டுக்குள் வந்து சேர்ந்தது. இந் நாட்டு முஸ்லிம்களை முன்னணிக்குக் கொண்டு வரக் கல்வித்துறையில் பாடுபட்ட மாபெரும் சீர்திருத்தவாதி ஸர் சையித் அஹ்மத்கான் (இவர், 1817–1898, அலிகார் சர்வ கலாசலையை நிறுவியவர்) தமது கவித்துவத்தாலும் தத்தவ ஞானபோதனையாலும் இம் முஸ்லிம்களைத் தட்டியெழுப்பிய இந்திய மகாகவி ஸர் முஹம்மத் இக்பால் (1876–1938) அரசியற்றுறையில் அனைவரையும் ஆளாக்கி விட்ட அசகாயசூரர், (இணையற்ற வீரர்) காயிதே அஃலம் முஹம்மதலீ ஜின்னு (1876-1948) ஆகியவர்களை இங்கு நினைவு கூரலாம். ஜமாலுத்தீன் அப்கானியாலும், அல்கவாக்கிபியாலும் கனவுகாணப்பட்ட முஸ்லிம் ராஜ்யம் இது காலைப் பாக்கிஸ்தானுய் வந்து விளைந்திருப்பது ஒரு மறக்கொணு விஷயமாயே யிருந்து வருகிறது.

(23-ஆம் பக்கத் தொடர்)

களாகவே இம்மார்க்கம் உண்டியையும் உடையையும் உறையுளையும் மதித்திருக்கிறது; அஃதாவது, உயிர் இருப்பதற்கு ஒருவனுக்கு எவ்வளவு அவசிய ஆகாரமும், உடுத்தாடையும், வசிப்பதற்கொரு நிழலும் தேவையோ அவ்வளவே ஒரு முஸ்லிமுக்குப் போதும். ஆயின், ஒழுக்கமும், ஆத்ம முன்னேற்றமுமே முதன்மையானவையாயிருக்கின்றன. ஆதலினுல்தான் பெண்மணிகளின் கற்பை — ஏன், ஆண்களின் கற்பைக்கூடத்தான் — இஸ்லாம் ஒரு விலைவரம்பிகந்த சிரோமணியென மதித்திருக்கிறது. எனவேதான் இவ்வரிய சிரோமணியைப் பழுதுபடுத்தினுல், அவ்வாண்பெண் இருவருக்குமே சரிசரியான சிக்ஷையை விதிக்கிறது. இவ்வாறு நூறு நூறு தோற்கசையடி, பகிரங்க ஸ்தலத்தில் அந்த "ஜானி"களை நிறுத்தி அவர்களுடைய பீஷ்டத்தில் கொடுத்தால், ஒரே வாரத்தில் இப்பாருலகிலுள்ள விபசார மனைத்தும் அழிந்தொழிந்து போய் விடமாட்டாவா?

இந் நவீன நாகரிக (?) உலகிலே "ஜினு" வென்பது "ஜாடை" யாகவே, கண்டுங் காணுதுபோல், விடப்பட்டு வருவதனுலேதான் இவ்வுலகினில் விபசாரம் இத்துணை மட்டும் மலிந்து காணப்படுகிறது. குர்ஆன் சட்டம் அமலில் இருந்து வரும் இப்னுசுஊத் அரசாங்கத்தில் "ஜினு" வென்பது அறவே கிடையாது. இது காலை ஒருவன் ஒரு பத்து ரூபாய்ச் செலவில் ஓர் அரபிப் பெண்ணை மணந்துகொள்ளக்கூடும். ஆனால், ஆயிரம் ரூபாய்க்கு அவளை விபசாரத்துக்கு வரிப்பது முடியாது. ஏன்? நூறு சவுக்கடி, பகிரங்க ஸ்தலத்தில்; அதுவும் ஒற்றையாடையுடன் கூடிய பீஷ்டத்திலே. இப்படிப்பட்ட கடின சிக்ஷைக்குமுன்னே "ஜினு" வென்பது சொல்லிக்கொள்ளாமலே ஓடி விடாதா? கடின வியாதிக்குக் கடுமையான பரிகாரமே செய்ய வேண்டும். இப்பாருலகம் இம்முறையைச் செய்யத் துணியுமா? கசையடியை அநாகரிகமென்று கத்தும். (A drastic disease requires a drastic remedy).



# ஆண்டவன் பிரீதிக்காக அர்ப்பணமாதல்

[அல்ஹாஜ் காஜா கமாலுத்தீன் (மர்ஹூம்) ]

"இன்னம், இப்ருஹீமை அவருடைய ரக்ஷகன் ஒருசில வசனங்களைக்கொண்டு சோதித்தபொழுது, அவர் அவற்றினைப் பூர்த்தி செய்துவிட்டார். (ஆகவே) 'நிச்சயமாக, நான் நும்மை மனிதர் கட்குத் தலைவராகச் செய்வேன்,' என்று (ஆண்டவன்) கூறினன். (அதுபொழுது இப்ருஹீம்) 'இன்னம் என்னுடைய சந்ததியிலிருந்து?' என்றுகூறி (வினவி)னர். [அதற்கு அல்லா(ஹ்)] 'எனது உறுதிமொழி ஒப்பந்தம் அக்கிரமக்காரர்களைச் சாரமாட்டாது,' என்றுரைத்தான்—"(குர்.2 : 124).

பூவுலகில் பெரும் பெரும் சம்பவங்களைப் போற்றிப் பகுத்துணர்வின் நினைவிலிருத்தவே பண்டிகைகள் கொண்டாடப்பட்டு வருகின்றன. அவ்வாறே ஈதுல் ஜுஹாவும், இப்ருஹீம் நபியும் (அலை) அவருடைய திருக்குமாரர் இஸ்மாயீல் நபியும் (அலை) எல்லாம் வல்ல அல்லாஹுத் தஆலாவின் ஆணைக்கிணங்க அடிமுடி சாய்த்து நடாத்திக்காட்டிய ஒரு மாபெரும் சம்பவத்தை இவ்வுலகினர்க்கெல்லாம் ஆண்டுதோறும் நினைவூட்டவல்ல ஒரு பெருநாளா யிருக்கிறது. இப்ருஹீம் நபி (அலை)க்கு வயது ஒரு நூறுக்கருகிலே நெருங்கி நின்றக்கால், அவ்வயோதிகப் பெரியாருக்கு இஸ்மாயீல் (அலை) என்னும் முதற்பேறு பிறக்கலாயிற்று. இப்ருஹீம் நபி (அலை) தமதாயுள் முழுதும் இறைவனை இறைஞ்சிவந்த "துஆ"வின் சற்பயனுக அத்திருக்குமாரர் ஹாஜராவின் திருவுதரத்தினின்று தோன்றுவாராயினர். இவர் வளர்ந்து வாலைப்பருவத்தை எய்தியக்கால், அதி வயோதிகராய அந்த இப்ருஹீம் நபி (அலை) தமது சொந்தக் கரத்தினுலேயே தங் குலக்கொழுந்தாகிய கான்முளை இஸ்மாயீல் (அலை) என்னும் ஏகபுத்திரரைத் தனக்காகப் பலி—(குர்பானீ) கொடுக்குமாறு கனவிலே கடவுளால் கட்டளையிடப் பெற்றுர். இம் மாபெருங் கட்டளை அவ் விருத்தாப்பிய தந்தைக்கும் அவருடைய வாலிபக் குலக்கொழுந்துக்கும் ஓரிணையற்ற மாபெருஞ் சோதனையாகவே யிருந்துவந்தது. இந்த இளவலை அந்த முதிர்வயதுத் தந்தை இடையுறு நெடுநெடும் பிரார்த்தனைகளுக்கப்பாலே, தமது குலம் விளங்கவும் கோத்திர நபிப்பட்டம் துலங்கவும் தங் கிழப்பிராயத்திலே வாரிசாய்ப் பெற்றெடுத் திருந்தார்; அச் சிறு இஸ்மாயீலும் (அலை) தம துயிர்வாழ்க்கையின் இறுதிலக்ஷியமாய— தந் தந்தையின் பாரமார்த்திக வாழ்க்கையாகிய நபிப்பட்டம் தமக்குக் கிட்டக்கூடுமென்று எண்ணி யிறுமாந்திருந்த எண்ணம் அதிசீக்கிரம் கைவரப் பெறலாமென ஆவலுடனே அதிகம் எதிர்நோக்கி நின்றூர்.

அப்படிப்பட்ட அவசர வேளையிலேதான் அல்லா(ஹ்)வின் ஆணை அவ் வயது தளர்ந்திருந்த தந்தைக்குக் கனவிலே அறிவிக்கப்பட்டது. வேறு சாதாரணத் தந்தைக்கும் தனயனுக்கும் அத்தகைய கடவுட் கட்டளை எப்படி யிருந்திருக்கும்? என்பதை நீங்களே நிதானித்துப் பாருங்களேன்! இப்ருஹீம் (அலை) நபியும், இஸ்மாயீல் (அலை) நபியும் ஆண்டவனது நாட்டத்துக்கு முற்றமுற்றத் தலை சாய்ப்பதையே தங்கள் இகலோகக் காரியங்களைக் காட்டினும் சாலச் சிறந்ததெனக் கொண்டு நின்றூர்கள்; இறைவன் பிரீதியை விட இக்குவலயக் காரியமே பெரிதென மதிக்கும் சுபாவம் அவர்களுடைய உதிரத்திலே ஊறப்பெற்றதில்லை. ஆதலால், அத் தந்தையார் தம் மைந்தரிடத்து ஆண்டவனுணையை அறிவித்ததுதான் தாமதம்; அக்கணமே அவ் வாலிபர் அல்லா(ஹ்)வுக்காகத் தங் குரல்வளையைத் தந்தையின் கூரியகட்கத்தின் கீழே தடையின்றி வைக்கத் தயாராகிவிட்டார். அல்லா(ஹ்)வின் ஆணைக்கு அணுத்துணையும் மாறுசெய்ய அவ் இளவல் மனமொப்பினுரில்லை. மனித சரிதையின் ஏடுகளைப் புரட்டிப் பார்ப்போமாயின், இவ்வாறு ஒரு சிறுபிள்ளை அல்லா(ஹ்)வின் ஆணைக்கு ஒரு சிறிதும் மறுத்துக்கூறுது சட்டெனத் தனதாவியைத் தத்தம் பண்ணத் துணிந்து முன்வந்த வேறொரு சம்பவத்தை நாம் மெய்ச்சரிதையில் கண்டுகொள்ள மாட்டோம்.

ஏகதெய்வக் கொள்கை யென்பது ஏதோ பார்ப்பதற்கு ஓர் எளிய கோட்பாடேபோல் தோற்ற மளிக்கலாம்; ஆனால், அவ்வேக தெய்வக் கோட்பாட்டின் நேர் வழியிலே நிற்பதென்பது அத்துணை யெளிய காரியமாயில்லை யென்பது வெள்ளிடை விலங்கலேயாம். ஏக

தெய்வக் கொள்கை யென்பது வெறு வாய் வேதாந்தக் "கலிமா" (மந்திரம்) மட்டுமே யன்று. ஏகதெய்வக் கொள்கையை ஒருவன் இடையறுது பின்பற்றியொழுக எத்தனையோ அரிய பெரிய தியாகங்களை யெல்லாம் புரிய வேண்டிய ஒரு கடினக் கோட்பாடா யிருக்கிறது. மானிட னென்பான் தன் விக்கிரகச் சுவாமிகள் மீது, தன் குருமகான்கள் மீது, தன் தேயத்தின்மீது, தேயத் தலைவர்கள் மீது, தன் ஜாதியின்மீது, தன் கோத்திரத்தின்மீது, தன் குடும்பத்தின்மீது, தன் மனைவி மக்கள் மீது, தன் சொத்து சுதந்திரத்தின் மீது, பட்டம் பதவிகள்மீது, அவ்லியாக்கள்மீது, "அல்லாசாமி" என்று அறியாதார் அழைக்கும் பஞ்சாத் தகடுகள்மீது, சமாதிகள்மீது வைத்துள்ள அன்பையும் ஆர்வத்தையும், பக்தியையும் விசுவாசத்தையு மெல்லாம் அடியுடனே களைந்துவிட்டு, அவற்றினை யெல்லாம் விட ஆண்டவன் பால் வைக்கும் பக்தி விசுவாசத்தைத் திரிகரண — "இக்'லாஸ்" — சுத்தியுடனே ஏற்று நடப்பதற்கு எத்துணைச் சிரமப்படுகிறுனென்று கவனித்துப் பாருங்கள். விக்கிரகத் தொழும்பு புரியும் மக்களும், சிலுவையை வணங்கும் சினேகிதர்களும், அவுலியாக்களை வணங்கும் ஆஸ்திகர்களும், "அல்லாசாமி" வைத்துப் பூஜிக்கும் நல்ல (?) முஸ்லிம்களும் ஆகிய அனைவரும் "ஆண்டவன் ஒருவனே" என்றுதான் உதட்டால் உச்சரித்துவருகிறுர்கள். இம்மக்களெல்லாரின் "ஷிர்க்" "பித்அத்"களைக் கவனித்துப் பார்த்தால், அதுகாலை நன்கு விளங்கும், ஏக தெய்வக்கொள்கை அனுஷ்டிப்பதற்கு எத்துணைக் கடினமாயிருக்கிற தென்னும் உண்மை.

எனவே, உண்மையான ஏகதெய்வக்கொள்கை யென்னப்படும் இந்த "ஸிராத்துல் முஸ்தகீம்"* என்பது, செயலளவிலே செய்துகாட்ட நாம் எத்தனையோ விதமான தியாகங்களை யெல்லாம் புரியவேண்டு மென்பதை நன்கு விளக்கிக் காட்டுவதா யிருக்கிறது. எனவே, "இக்'லாஸு"டன் கூடிய ஏக தெய்வக் கொள்கைக்கு வாயால் அம் மந்திரத்தை ஓதுவதுடனே வாளா நின்றுவிடாது, நாம் நம்முடைய இறைவன் பிரீதியைச் சம்பாதிப்பான் வேண்டி, நமக்குப் பிரியமாயுள்ள எல்லாவற்றையும் சர்வசங்க பரித்தியாகம் செய்யத் தக்க மனப்பான்மையையும் மிகவாய்ப் பெற்றுக் கொள்ளுதல் வேண்டும். மானிடனது உள்மனத்தினுள்ளே அவனுக்கே தெரியாத அநேகவித ஆர்வங்களுண்டு. இவ்வந்தரங்க ஆசைகளை அழித்தொழிப்பதற்குரிய ஒரே வழி, வெளிமனத்துக்குத் தெரிந்துள்ள அத்தனை ஆசை — (ஆர்வங்) களையும் அழித்தொழிப்பதாயேயிருந்துவருகிறது. இவ்வுயரிய ஆன்மிக உச்சநிலை தான் "முமுக்ஷுத் தன்மை" யென்று மொழியப்பட்டு வருகிறது; இத்தகைய "முமுக்ஷுத் தன்மை"யை யடைந்து நின்றவர்களே நபி இப்ருஹீம் (அலை) அவர்களாய் விளங்கிவந்தார்கள். எனவே தான், இம்மகான் இறைவனது விழைவிற்கிணங்கித் தங்கள் ஒரேவாரிஸாய் விளங்கிய ஈரற்கொழுந்து இஸ்மாயீலை(அலை)க் குர்பானீ கொடுத்து விட முனைந்து முன்வந்தார்கள். அந்த மகா நபியின் இக்'லாஸான ஏக தெய்வக் கொள்கையை இவ்வுலகினர்க் கெல்லாம் எண்பித்துக் காண்பிக்க எல்லாம் வல்ல இறைவன் நாடினுன்; அச்சோதனையில் இப்ருஹீம் நபி(அலை)தேறினுர்கள்; தனையர் இஸ்மா

அல்ஹாஜ் காஜா கமாலுத்தீன்

* "ஸிராத்துல் முஸ்தகீம்" என்னும் ஏக தெய்வக் கோட்பாட்டிலே சறுகாது செல்வதற்குரிய எடுத்துக்காட்டு இதுபோலிருக்கிற தென்னலாம்: விசுவா யிழுத்துக் கட்டப்பட் டுள்ள ஒரு தந்திக் கம்பிமீது ஒரு சைக்கிளை நிறுத்தி, அதன் மீது ஓராள் ஏறி அப்பக்கம் இப்பக்கம் சாயாது செல்வது போலா யிருக்கிறது. ப—ர்.



யீலும்(அலை) அக்கடிய சோதனையில் தேறியே வெளிவந்தார்கள். இருவருக்கும் இறைவன் கருணை தழைத்தோங்க!

ஆண்டவன் அத் தந்தை மைந்தர்களின் மூலமாய் ஏக தெய்வக் கொள்கையின் இக்'லாஸை இந்நானிலத்தே நன்கு விளக்கிக்காட்டினுன். அப்பாலே அத் திரிகரண சுத்தியுடன்கூடிய ஏக தெய்வக்கொள்கை இக் குவலய மெங்கும் சிறிது சிறிதாய்ப் பரவத் துவக்கிற்று. இப்ருஹீம் நபியின் இச் சோதனை இற்றைக்கு நாலாயிரம் ஆண்டுகட்குமுன்னே பாரான் என்னப்படும் அரப் நாட்டிலே நடைபெற்றது. இன்று இப்பூவுலகின் முக்காற் பங்கிற்குமேற்பட்ட மக்கள் அந்த இப்ருஹீம் (அலை) நபி— ஆபிரகாம் தீர்க்கதரிசி—க்குரிய மார்க்கத்திலே யூதர்களாகவும், கிறிஸ்தவர்களாகவும், முஸ்லிம்களாகவும் இருந்துவருகிறுர்கள். எனினும், எஹூதி — (யூதர்)களும், நசாராக்—(கிறிஸ்தவர்)களும் நபி இப்ருஹீம் (அலை) அவர்களது இக்'லாஸான ஏக தெய்வக் கோட்பாட்டை விட்டு வெகுதூரம் விலகிச் சென்றுவிட்டார்கள். இவ்வாறு அவ்விருதிறத்தாரும் திக்குக் கொருவராய் நேர்வழி விலகிச் சென்றிருந்தும், இவர்களை அவர்கள் வழிசறுகியவர்க ளென்றும், அவர்களை இவர்கள் வழிதவறியவர்க ளென்றும் குறை கூறுகிறுர்கள். ஆயின், ஆபிரஹாம் (அலை) தீர்க்கதரிசியின் அந்த ஈடிணையற்ற, திரிகரண சுத்தியுடன்கூடிய ஏக தெய்வ இக்'லாஸ் கொள்கையை எம்பெருமான் முஹம்மத் நபி (சல்) அவர்களே ஏதும் இறைவனுக்கு இணைவைத்து வணங்கும் ஷிர்க்கைச் செய்யவியலாத விதத்திலே இத் தாரணியில் நிலைநிறுத்தி யுள்ளார்கள். இப்ருஹீம் (அலை) நபியவர்களேபோல் முஹம்மத் (சல்) நபியவர்கள் ஆண்டவனுணைக்கு அப்படியே அடிமுடி சாய்த்து நடந்துவந்தார்கள்; அந்த இறுதி நபியின் தோழர்க ளெல்லாரும் இஸ்மாயீல் (அலை) நபியை நிகர்த்து அந்த இறுதி நபியின் கட்டளைக்கு முற்றும் கட்டுப்பட்டே ஒழுகிவந்தார்கள். நபி முஹம்மத் (சல்) அவர்களும், அப்பெருமானுரின் தோழர்களும், தங்களுக்குரிய அனைத்தையும் — மனைவி மக்கள், சொத்து சுதந்தரம், பந்துமித்திரர்கள், வீடு வாசல்கள் ஆதியவற்றையெல்லாம் — அல்லா(ஹ்)வின் ஆணைக்குக் கட்டுப்பட்டு, சர்வசங்க பரித்தியாகம் செய்துவிட்ட சரித்திரம் எல்லார்க்கும் இனிது விளங்கக் கிடக்கின்றது.

அவ்வாதிகால முஸ்லிம்கள் அவ்வாறு "அல்லா(ஹ்)வே கதி"யென உறுதிபூண்டு ஒழுகிவந்தமையால், அவர்கள் அக்கால வுலகினில் முக்காற் பங்குக்கு மேலாகவே இஸ்லாமிய ஆட்சி புரியும் இமாம்—(தலைவர்)களாக இம்மாநிலத்திலே உயர்த்தி வைக்கப்பட்டார்கள். இதற்குரிய தீர்க்க தரிசனம் இக்கட்டுரையின் தலைப்பில் பொறிக்கப்பட் டுள்ள திருவாக்கியத்தில் விளக்கப்பட் டுள்ளது. இப்ருஹீம் நபி (அலை) ஒரு மாகொடிய சோதனைக்கு உள்ளாக்கப்பட்டார்கள்; அச் சோதனையில் அம் மகா நபி மிக்க வெற்றியுடனே சித்திபெற் றுயர்ந்தார்கள். இதற்குரிய சம்மானமாக அம் மகாநபி மனிதர்களுக்கு—இஸ்ரவேலர், இஸ்மவேலர்—(பனீ இஸ்ராயீல், பனீ இஸ்மாயீல்) ஆகிய இருபெருங் கிளையினர்களுக்கு—(அஃதாவது, இப்பூவுலகில் வதியும் யூதர்கள், கிறிஸ்தவர்கள், முஸ்லிம்கள் ஆகிய முப்பெரும் மதத்தினர்கட் கெல்லாம்) இமாம் —தலைவர்— ஆக உயர்த்தப்பெற் றிருக்கிறுர். இத்துணைப் பெரிய கௌரவம் இக் குவலயத்தில் வேறெவருக்கும் வாய்ந்திருக்கக் காணேம். இவ்வளவுடனே அந்த இப்ருஹீம் நபி (அலை) திருப்தியடையாது, அத்தகைய தலைவர்கள் தங்கள் சந்ததியிலிருந்தும் எழுப்பப்பட வேண்டுமெனப் பிரார்த்தனை புரிந்தார்கள். இதற்கு இறைவன் சரியென்று கூறி, அக்கிரமக்கார மக்களுள்ளிருந்து அவ்வாருய தலைவர்கள் எழுப்பப்பட மாட்டார்க ளென்று சொல்லி முடித்துவிட்டான்.

இதிலிருந்து விளக்கமாகும் உண்மை யாதாயிருக்கிறது? எவர்கள் இவ்வுலக இச்சைகளைத் துறந்து ஏகேசுவரனது ஆணைக்கிணங்கி இக்'லாஸுடன் ஒழுகவில்லையோ, அவர்கள் அல்லா(ஹ்)வினுல் இமாம்—(தலைவர்)களாக உயர்த்தப்படமாட்டார்கள். இத் தேவக் கட்டளைக்குக் கட்டுப்பட்டு நடந்துவந்தகாலம்வரை எம் முஸ்லிம்கள் இப்பூவுலகிலே மாபெரும் மகா ராஜ்யங்களை யெல்லாம் ஆண்டு வந்தார்கள்; அவர்களுடைய ஈமான் இக்'லாஸுடனே யிருந்துவந்தது. காலஅடைவிலே அம் முஸ்லிம்கள் ஏக இறைவனைக் கைவிட்டு, இறந்து போய்விட்ட மகான்களை "அவ்லியாக்கள்" என்று சொல்லி, "வஸீலா" என்னும் பெயரை வைத்து வணங்கத் தலைப்பட்டுவிட்டார்கள்; அவ்வந் நாட்டு முஸ்லிம்களும், "எல்லாரும் ஓர்குலம் எல்லாரும் ஓரினம்" என்னும் இஸ்லாமிய விசுவ மகா சகோதரத்துவத்தை மறந்து, அவரவர் தேசமே அவரவருக்கும் பிரதானம் என்னும் குறுகிய கோட்பாட்டைக் கடைப்பிடிக்க முற்பட்டுவிட்டார்கள். இக்'லாஸான ஏகதெய்வக் கொள்கையைவிட மனைவி மக்களே மேலாய

வர்கள், சொத்து சுதந்தரமே மேலாயவை, பட்டம் பதவியே சிறந்தவை யென்று மதித்து நடக்கத் துவக்கிக் கொண்டார்கள். இப்படிப் பட்ட பல்வேறு வித ஷிர்க்குகளுக்கு ஆளாய் விட்டமையாலேயே இம் முஸ்லிம்கள் இது காலை இத்துணை அதலபாதலத்துள்ளே ஆழ்ந்து தாழ்ந்து போய்க் கிடக்கிறார்கள். அந்தோ! அந்தோ!

எனவே, இம் முஸ்லிம்கள் இனியும் இம் மேதினியில் இமாம்—(தலைவர்)களா யுயர நாடுவார்களாயின், இவர்கள் அந்த இப்ரு ஹீம் (அலை) இஸ்மாயீல் நபி (அலை) அவர்கட் குரிய ஈடிணையற்ற இக்'லாஸாய ஏகதெய்வக் கொள்கையின் பக்கலிலே சென்று சேர்தல் அத்தியாவசியமாகும்; இன்னம், அவ்விரு நபி மார்களுக்குமுரிய இக்'லாஸான ஏக தெய்வக் கொள்கையை 1400 ஆண்டு கட்கு முன்னே அவதரித்த நபி முஹம்மத் (சல்) அவர்கள் என்றும் அசைவுறுவாறு குர்ஆன் ஷரீபின் துணையைக்கொண்டு நிலைநிறுத்திச் சென் றுளார்கள். இத்தகைய இக்'லாஸான ஏக தெய்வக்கொள்கையை நாம் அடியொற்றிப் பின்பற்றி யொழுகுகிறோம் என்பதை எண் பித்துக் காட்டவே அந்த இஸ்மாயீல் (அலை) நபியின் குர்பானீயைப் பின் தொடர்ந்து இந்த ஈதுல் லுஹா வன்று நாம் குர்பானீ கொடுக்க வேண்டுவது ஒரு (வாஜிப்) கட மையா யிருக்கிறது. எனவே தான் இந்த ..ன் குர்பானீ இக்'லாஸான ஏக தெய்வக் கொள்கையைச் சுட்டிக் காட்டுவதா யிருக்கிற ..னை ஆன்றோர் அறைகின்றனர். எனவே, இக்'லாஸான ஏகதெய்வக் கொள்கையைக் க..டைப் பிடிக்காது, செய்யக்கூடாத ஷிர்க்குக ளனைத்தையும் செய்துவிட்டு, ஆண்டுக்கு ஒருமுறை ஓர் ஆட்டைப் பலியிடுவதால் மட் டும் நஞ் சமூகம் முன்னேறிவிட மாட்டாது; நாமும் இக்'லாஸான ஏகதெய்வக் கோட் பாட்டைப் பின்பற்றி யொழுகியவராய்க் கருதப் பட மாட்டோம்.

## பிரார்த்தனைகள் (துஆக்கள்)

இந்நூலில் குர்ஆனிலுள்ள 99 துஆக் களும், துஆவின் அவசியம் குறித்த கட்டுரையு ..ங்கி யிருக்கின்றன. விலை அணா 12. தபால் ..லவு தனி.

## நபிகள் நாயக வாக்கியம்

உலகம் புகழும் உன்னத நபி முஹம்மத் முஸ்தபா ரசூல் (சல்அம்) அவர்கள் உலக மக்களின் மேன்மைக்காகத் திருவாய் மலர்ந் தருளி யுபதேசித்துச் சென்ற பொன்மொழி களின் பொறுக்கு மணிகளான 451 ஹதீ துகள் அழகாக அச்சிடப் பட்டு, சட்டைப் பைக்குள் அடங்கத்தக்க விதமாக பைண்டு செய்யப்பட்டுள்ளன. இந்நூல் கண்கவரும் மூவர்ண ஆர்ட் ஜாக்கெட்டுடன் கூடியது. இப்புதிய ஏழாம் பதிப்பின் விலை ரூ. 1—8—0 தான். வி. பி. செலவு வேறு.

ஷாஜஹான் புக் டெப்போ, சென்னை 5.

## K. வெங்கடராவ் எழுதியுள்ள

அபூர்வமான சிற்றின்ப நூல்கள்.

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | காமக் களஞ்சியம் | 0 | 14 | 0 |
| 2. | ஆண் பெண் இன்பம் | 0 | 14 | 0 |
| 3. | ஆ. பெ. ஜனனேந்திரிய விளக்கம் | 0 | 12 | 0 |
| 4. | குடும்பக் கட்டுப்பாடு | 0 | 12 | 0 |
| 5. | காம கலாசாகரம் | 0 | 12 | 0 |
| 6. | தேக தர்ம அவஸ்தை | 0 | 12 | 0 |
| 7. | உச்சஸ்தான இன்ப சுகம் | 0 | 12 | 0 |
| 8. | தேக தத்துவ வினு விடை | 0 | 12 | 0 |
| 9. | ஷி இரண்டாம் பாகம் | 0 | 9 | 0 |
| 10. | சுசங்கியகன்னி | 0 | 12 | 0 |
| 11. | ஆண் பெண் உறவு ஆபாசமா? (வேள்) | 1 | 0 | 0 |
| 12. | என் காதலி (சிரஞ்சீவி) | 1 | 0 | 0 |
| 13. | சம்சார பந்தம் ,, | 1 | 0 | 0 |
| 14. | நித்ய கன்னி ,, | 0 | 9 | 0 |
| 15. | யார் விபசாரி ,, | 0 | 8 | 0 |

ஷாஜஹான் புக் டெப்போ, சென்னை-5





# நீங்களறிவீர்களா?

1. நந் திருமறையாம் குர்ஆன் ஷரீபில் எத்தனை ஆயாத்—(திருவாக்கியங்)கள் இருக் கின்றனவென்பதை யறிவீர்களா? அத்திரு மறையில் 6666 திருவாக்கியங்கள் இருக்கின் றன வென ஹஜ்ரத்தே ஆயிஷா(றலி)அறைந் துள்ளார்க ளெனச் சர்வ சாதாரணமாய்ச் சொல்லப்பட்டு வருகிறது. ஆயின், பற் பலர் பற்பலவிதமாய்க் கணித்துள்ளனர். அவற்றின் விவரம் இதுவாகும்:—

| | |
|---|---|
| ஆயிஷா பிராட்டி | 6666 |
| ஷாம் வாசிகள் | 6250 |
| கூபாவாசிகள் | 6236 |
| இப்னு மஸ்ஊத் | 6218 |
| இஸ்மாயீல் இப்னு ஜஃபரே மதனி | 6214 |
| இராக் வாசிகள் | 6214 |
| மக்கா வாசிகள் | 6212 |
| பஸ்ரா வாசிகள் | 6216 |

இந்தியாவில் அச்சிடப்பெற்றுள்ள திருக் குர்ஆன்களில் கூபாவாசிகளின் கணக்குப் படியே ஆயாத்கள் கணக்கிடப்பட் டிருக்கின் றன.

["ஆயத்"—(Verse) என்பதற்குத் தமிழில் "வாக்கியம்" என்றே மொழி பெயர்த்தல் வேண்டும்.]

திருக் குர்ஆனில் ஓரக்ஷரமோ, ஒரு மேல் கீழ உயிர்க்குறி, மெய்ப்புள்ளியோ அன்று முதல் இன்றுவரை மாற்றப் படவில்லை யென்பது மெய்யேயாகும். ஆனால் திருவாக் கிய (ஆயத்) எண்ணிக்கையில் வித்தியாசம் காணப்படுவது, வாக்கியங்களை நிறுத்தும் அரைப்புள்ளி (;) முழுமுற்றுப் புள்ளி (.) எண்ணிக்கை வேறுபாட்டால் ஏற்பட்டதா யிருக்கிறது. இதற்கும் குர்ஆன் வாசகத் துக்கும் ஏதும் சம்பந்தமில்லை யென் றறியக் கடவீர்கள்.

2. ஒருநாள் நபிகள் திலகம் (சல்) தங்க ளருமைப் புதல்வி, காத்தூனே ஜன்னத், பீபீ பாத்திம(த்)துஜ் ஜொஹ்ரா (றலி) அவர் களில்லம் சென்றார்கள். ஆங்கிருந்த "சுவன பதிக்குரிய அப்பெருமாட்டி" சோகமுற்றுக் கலங்கிய கண்களுடனே காணப்பட்டார் கள். விசேடம் என்னவென அவ்வருமைத் தந்தையாகிய இருலோக வள்ளல் (சல்) அவர்கள் தம் பிரிய புதல்வியை நோக்கி விசாரித்தார்கள். அப்பொழுது பாத்திமா (றலி) தங்களிரு நயனங்களிலும் நீர்மல்க, "என்னருந் தந்தாய்! யான் இரண்டு தினங் களாய்ப் பட்டினியா யிருக்கிறேன். இதனால் என் வயிறு குழைந்து குழிவிழுந்து முதுகு கூனிவிடாதிருக்கும் பொருட்டு ஒரு கல்லை என் வயிற்றிலே வைத்துக் கட்டியிருக் கிறேன்; இதோ பாருங்கள்," என்று தங்கள் மேலங்கியைத் தூக்கிக் காட்டினார்கள். அது கண்டு நபிபெருமானவர்கள் (சல்) தங்கள் சட்டையைத் தூக்கிக்காட்டி, "என் னருங் குழந்தாய், இங்கே பார்; யான் என் அடிவயிற்றிலே இரண்டு கற்களை வைத்துக் கட்டியிருக்கிறேன். பலநாட் பட்டினி!" என்று மனவமைதியுடனே பையச் செப்பி னார்கள். அவர்கள் இஷாஅத் அப்படி!

3. நபிபெருமான் (சல்) காலத்தில் மதீனா விலே ஒரு வயோதிக மாது இருந்தாள். அவளுக்குச் சிறிது சித்த பிரமையுண்டு, அம் மாது நபிகட்டிலகத்தின்பால் வருவாள்; அவளைப் பார்த்தவுடனே நபிகணயகர் (சல்) சாடைகாட்டுவார்கள். அம் மாது பக்கத்துச் சந்தொன்றில் போய்நிற்பாள். அப்பால் நபி பெருமானார் அவள்பால் சென்று வினவுவார் கள்; அவள் பிதற்றும் பிதற்றல்களையெல் லாம் மிக்க பொறுமையுடனே செவிமடுத் துத் தீர்ப்பார்கள்.

4. மதீனாவில் ஊழியம் புரிந்து வந்த வேலைக்காரப் பெண்கள் நபிபெருமானார் (சல்) பால்வந்து, தங்கள் எஜமான் எஜமானிகளைப் பற்றி ஏதேனும் புகார் செய்தால், அப்பெண் களுடனே நபிகணதர் சென்று, அவர்க ளுக்குரிய எஜமான் எஜமானியரிடத்து விசாரணைபுரிந்து,சமாதானம்செய்துவைத்து விட்டுத் திரும்புவார்கள். அத்துணை எளிய ஸௌலப்பிய குணவிசேஷம் வாய்ந்தவர் களாய் விளங்கினார்கள் மகான் முஹம்மத் (சல்) நபியவர்கள்.

## மதிப்புரை

**ரகசிய நோய்கள்** [‘லக்ஷ்மி’ என்னும் மாறு பெயர் சூடிய டாக்டர் திரிபுர சுந்தரி ‘வரைந்தது. 132 பக்கங்கள். விலை ரூ. 2–0–0. இன்ப நிலயம், சென்னை-4 விலாசத்தில் கிடைக்கும்.] மனிதனுக்குத் தோன்றும் பல வகை நோய்களைப் பற்றியும் தமிழில் போதிய வைத்திய நூல் எதுவுமே தற்காலத்தில் நிரம்பக் கிடைப்பதில்லை. அதிலும் காம சேஷ்டையால் மக்களிடையே பரவி நிற்கும் பயங்கரமான கிரந்தி, மேக வெட்டை, மேக வெள்ளை, அரையாப்பு, மேகப் புண் முதலிய கொடிய வியாதிகளைப் பற்றி நம் மக்கள் தமிழில் தெரிந்துகொள்ள இதுவரை வழியில்லாமலிருந்தது. அந்தப் பெருங்குறையைப் போக்கவே இந் நூல் வெளிவந் திருக்கிறது. இந்த மாதிரியான காம சேஷ்டைவினைவால் ஏற்படும் வியாதிகளைப் பாமரர் “பெண்பிள்ளை சீக்கு,” அல்லது “பெண்பிள்ளை வியாதி” என்று அர்த்தமில்லாமல் பேசிக்கொள்வரே தவிர, எப்படி அந் நோய் தோன்றுகிறது, அதைத் தடுக்க என்ன மார்க்கம், வியாதிக்குச் சிகிச்சை என்ன என்பன போன்ற சர்ச்சையில் இறங்குவ தில்லை. நோய் தோன்றிய அவனோ அல்லது அவளோ நடமாடும் பேய்களாய்த் திரிந்து மற்றும் பலருக்கும் அதைப் பரப்பிவிட்டு, சொல்லொணு இம்சைக்கு உள்ளாகி மாள்வது நம்நாட்டில் சர்வ சாதாரணம். இந் நூலாசிரியை தற்கால நவீன டாக்டர்க் கல்வியில் தேர்ச்சி பெற்ற, நல்ல அனுபவமிகுந்த சிறந்த வைத்திய சிகாமணியாகையால், ரகசிய நோய்கள் எப்படித் தோன்ற ஆரம்பித்தன வென்பதைச் சரித்திர பூர்வமான ஆதாரங்களுடன் எடுத்துக் காண்பித்து, விஞ்ஞான பூர்வமாக அவ் வியாதிகளின் இலக்ஷணங்கள் என்னென்ன வென்பன வற்றை இனிது விளக்கிவிட்டு, ‘ஸிபிலிஸ்’ என்னும் கிரந்திப் புண் எவ்வளவு பயங்கரமான பொல்லாத தொற்று நோய் என்பதை வெகு அழகாகவும், விவரமாகவும், நுணுக்கமாகவும் வைத்திய சாஸ்திர முறைப்படி நன்கெடுத்து அலசி வருணித்து, வியாதி வராமல் தடுக்கும் மார்க்கம், வந்தபின் கடைப்பிடிக்க வேண்டிய தடுப்பு முறைக ளென்ன என்ன வென்பனவற்றை வெகு உன்னதமாகப் போதித்துள்ளார். ரகசிய நோய்களின் பயங்கரத்தை விவரிக்குமுன் இவர் ஆண் பெண் உறுப்புக்கள் பற்றிய விவரங்களை நன்கு விஸ்தரித்து, சாதாரண மனிதன்கூடச் சுலபமாக விளங்கிக் கொள்ளத்தக்க மிக எளிய முறையில் விஷயங்களை எடுத்துப் போதிக்கிறார். கண்ட கண்ட வைத்தியங்களையும் கண்மூடித்தனமாகச் செய்து வியாதியைப் பன்மடங்காகப் பெருக்கிக்கொள்ளும் கெட்ட பழக்கத்தில் மூழ்கி நிற்கும் பாமர மக்களான நம் சமூகத்தினரிடையே இந்த நேர்ந்தியான துணைபுரியும் நூல் மக்களைத் தவருன பாதையில் விழாமல் தடுப்ப துடன், தவறிவிட்ட பாவிகளைக் கைதூக்கிவிடும் நல்வழிகாட்டியாகவும்காணப்படுகிறது. இம்மாதிரியான விஞ்ஞான பூர்வமான தமிழ் வைத்திய நூல் யாவர்க்கும் பயன்படத்தக்க விதமாக நிரம்பவும் வெளிவர வேண்டும். அப்போதுதான் நம் நாடு விரைவில் முன்னேற்றத்தைப் பெற்றுக் கொள்ளும். ரகசிய நோய்கள் பற்றிய பகிரங்க நூல் இதுவாகையால், எல்லோரும் (ரகசிய நோய்க்கு உள்ளானவர்கள், உள்ளாகாதவர்கள் அனைவரும்) இதை வாங்கி நன்ருய் ஊன்றிப் படிக்க வேண்டு மென்று சிபாரிஷ் செய்கிறோம். இந் நூலாசிரியை வைத்தியப் பட்டம் பெற்ற மேதாவி யென்ருலும், மிகச் சாதாரண சொற்பிழைகளுடன் தமிழ் வார்த்தைகளைச் சில இடங்களில் வதைபுரிந் திருக்கிறார். பிரசுரகர்த்தாக்களேனும் அப்பிழைகளைத் திருத்திப் பிரசுரித்திருக்க வேண்டும். அடுத்த பதிப்பேனும இலக்கண, சொல், வாக்கியப் பிழைக ளின்றி சீர்திருத்தப்படு மென்று எதிர்பார்க்கிறோம்.

**கலைப்போர்** [பி. வி. இராமசாமி வரைந்தது. 96 பக்கங்கள். விலை ரூ. 1–0–0. கலைச் செல்வ நிலயம், சென்னை-2 என்னும் விலாசத்தில் கிடைக்கும்.] 18-ஆம் நூற்ருண்டில் பிரெஞ்சு நாட்டு நாட்டிய மாதர்கள் இங்கிலாந்து சென்று ஆங்கில மேடைகளில் நடனமாடி, ஆங்கில நாட்டியக்காரிகளின் பிழைப்பைக் கெடுத்தார்கள் ஆங்கில மாதுகளைவிட பிரெஞ்சு மாதுகள் அரைகுறை நிர்வாணமாக ஆடி இளைஞர்களைக் காம வலைக்குள் வீழ்த்தும் சாகசம் அதிகம் மிக்கவர்களானபடியால், பொதுமக்கள் இந்த வெளிநாட்டு மாதரின் நடனத்தைத் திரளாகக் கண்டு மகிழ்ந்தனர். உள் நாட்டுப் பெண்களின் பிழைப்பை இப்படி வெளிநாட்டுப் பெண்கள் வந்து கெடுப்பதைக் கண்டு மனமுடைந்த ஆங்கில நாட்டுப் பற்றுமிக்க இளம் வாலிபர்கள் பிரெஞ்சுக்காரிகளை ஊரைவிட்டு விரட்ட ஒரு மார்க்கம் தேடினர்கள். அதன் விளைவாக, அந்த பிரெஞ்சு மாதுகள் நடனம் புரியும் வழுவழுப்பான நாடக மேடை யரங்குமீது யாருக்கும் தெரியாமல் பட்டாணிக் கடலைகளைத் தூவி விட்டார்கள். நாட்டியமாடிய நடிகைகள் அந்தக் கடலை மீது கால் வைத்து வழுக்கி விழுந்து கைகால் ஒடிந்து இங்கிலாந்தை விட்டே ஓடிவிட்டார்கள். இந்த நடத்தையை அடிப்படையாய் வைத்து, டக்ளஸ்ஜெரோல்டு என்பவர் ஆங்கிலத்தி லெழுதிய ‘ட்யூக்ஸ் நாடகமன்ற நடிகை’ என்னும் நூலின் தமிழாக்கம் இது. இதைத் தமிழில் வெளியிட்டிருக்கும் திரு இராமசாமி நம் நாட்டுக் கலைகளைப் பிறநாட்டுக் கலைகள் வந்து அழிப்பதை நாமும் இப்படி யெல்லாம் தடுக்க வேண்டு மென்று சுட்டிக் காட்டுகிறார்.

**இஸ்லாமிய போதனை** [இரண்டு பாகங்கள், முறையே 36 பங்கங்களும், 42 பக்கங்களும் கொண்ட சிறு சிறு நூல்கள். விலை 8 அணு, 8 அணு. கோட்டைக்குப்பம் **S. M.** அப்துல் ஹக்கீம் பாருக் பாக்கவீ மொழிபெயர்த்தவை அன்ஜுமன் தப்லீகுல் இஸ்லாம், மேல்விஷாரம் என்னும் விலாசத்தில் கிடைக்கும்] இஸ்லா மார்க்கக் கடமைகள் பற்றிய அடிப்படைத் தத்துவங்களை இளஞ் சிறுவர்கள் மிக இலேசான முறையில் எளிதில் புரிந்து கொள்ளத் தக்கவாறு அழகாக வினு-விடைகளாக எல்லாத் தத்துவங்களையும் நன்கு விளக்கிக் காட்டியுள்ளார்கள். ஈமான், தொழுகை, ஒலூ, ஸ்னனம் முதலிய சகல விஷயங்களும் கேள்விகள் ரூபமாகவும், பதில்கள் மூலமாகவும் பிரசுரிக்கப்பட் டிருப்பதால், எல்லாப் பெற்றோர்களும் தங்கள் புத்திரர்களுக்கும் புத்திரிகளுக்கும் இந்த இஸ்லாமிய போதனை என்னும் நூலின் இரு பாகங்களையும் சொற்ப விலையில் வாங்கிக் கொடுத்து நல்ல ஸாலிஹீன்களாக உயர்த்துவார்களாக. பிள்ளைகளும் வேறு யாருடைய உதவியு மின்றி ஈமான் கொள்ளும் மார்க்கங்களைச் சுலபமாகத் தெரிந்து கொள்வதுடன், அவர்களுடைய மனத்தில் என்னென்ன கேள்விகள் இயற்கையாக அடுத்தடுத்து எழுமோ அந்தக் கேள்விகளுக்குத் தக்க விடைகளும் தரப்பட்டிருப்பதைக் கண்டுகொள்வர்.

**தௌஹீதுக் கடல்** [ஷெய்கு முஹம்மது அப்துல் காதிறு வலியுல்லாஹ் வரைந்தது. 52 பக்கங்கள். விலை ரூ. 1-2-0. கிடைக்குமிடம்: மஷாயிக்ஸ், பட புத்தக வியாபாரி, 312 தெமட்ட கொடை ரோடு, கொழும்பு-9] சீடர்களுக்கு ‘முரீது’ கொடுக்கும் ஷெய்கு, மஷாயிகுகளின் இனத்தைச் சேர்ந்த ஒருவரால் இந் நூல் எழுதப்பட் டிருக்கிறது. இஸ்லாத்தின் மிகச் சாதாரண ஏகத்துவத் தௌஹீது சித்தாந்தத்தைப் பற்றியே நம் முஸ்லிம் சகோதரர்கள் பலர் இன்னம் சரியாகப் புரிந்துகொண் டில்லாத இந்தக் காலத்தில் பெரிய பெரிய தத்துவார்த்த ஆழ் சமுத்திரத்தின் அதல பாதலங்களை எடுத்து விளக்கும் இந் நூல் எவ்வளவு தூரம் நம் சமூகத்துக்குப் பயன்தரக்கூடு மென்பதை எம்மால் அளவிட்டுரைக்க முடியவில்லை. மேலும், ஆழமான அர்த்தமுள்ள அரபுச் சொற்களைச் சரளமாக இந் நூலில் எடுத்துப் பொழிந்து, சாதாரண மார்க்க ஞானமுள்ளவன் சுலபமாகப் புரிந்து கொள்ள இயலாதபடி செய்துவிட் டிருக்கின்றனர். எனினும், தௌஹீது சித்தாந்தத்தின் தத்துவத்தை இந் நூல் ஓரளவுக்கு விளக்கி வைக்கிற தென்று கூறலாம். ஆனல், விஞ்ஞான பூர்வமாகச் சில தத்துவ நுணுக்கங்களை எடுத்துக்கூற முனைந்த இந் நூலாசிரியர் சில பிழைகளைப் புரிந்திருக்கிறார். குளவியின் புழு இயற்கையாகவே குளவியாக வளர்கிற தென்பதுதான் விஞ்ஞான உண்மையன்றி, இந் நூலின் 8-ஆவது பக்கத்தில் வருணிக்கப்பட்டிருப்பதுபோல் “குளவி தன் இனமல்லாத புழுவினத்தின் குஞ்சை”த் தன் விஷக் கொடுக்கால் கொட்டி அதைக் குளவியாக்குவ தில்லை. இச் சாதாரண உண்மையை விஞ்ஞானத்துக்கு மாற்றமாக எவனே முற்காலத்தில் திரித்து விட்டதை இந்தப் பெரிய தவ்ஹீது சித்தாந்த நூலெழுத முற்பட்டவர் அப்படியே எடுத்தாண் டிருப்பது குற்றமாகும்.

# பன்றி யிறைச்சி புசிப்பதால் விளையும் பேரபாயங்கள்

பன்றியின் மாமிசத்தை அருந்துவது பாபமென்று ஆண்டவன் குர்ஆன் வேதத்தில் மட்டுமின்றித் தவ்ராத் வேதத்திலேயே கூடத் தடை செய்துவிட்டிருக்கிறான். ஏன் தெரியுமா?

அமெரிக்க நிபுணரும், வைத்திய விற்பன்னரும், பெரிய ஆராய்ச்சியாளருமான டாக்டர் கிளென் ஷெபர்டு என்பவர் 31-5-1952 "வாஷிங்டன் போஸ்ட்" டென்னும் பிரபல அமெரிக்க சஞ்சிகையிலே வரைகிறார்:—

அமெரிக்க யூனைட்டெட் ஸ்டேட்ஸ் நாட்டிலும், கனடா தேசத்திலும் வசிக்கிற மக்களுள் ஆறு பேருக்கு ஒருவர் வீதம் அவர்களுடைய உடற் சதையிலே ட்ரிக்கினோஸிஸ் (Trichinosis) என்னும் கிருமிகள் நிறைந்திருக்கின்றன. ட்ரிக்கெனெல்லா (Trichenella) என்னும் கிருமிகளுடன் கூடிய பன்றி மாமிசத்தை உணவாய் உண்பதனால்தான் அந்த வியாதி உற்பத்தியாகிறது. இந்தக் கிருமி களால் பாதிக்கப்பட்டவர்களுக்கு வெளிப்படையான அறிகுறி பெரும்பாலும் தென்படுவதில்லை. அப்படி அறிகுறி தென்பட்டாலும் பல பேர் சிறுகச் சிறுக மீண்டுவிடுகின்றனர். சில பேர்வழிகள் செத்துப்போய் விடுகிறார்கள்; இன்னம் சில பேர் என்றும் மீளமுடியாத கொடிய நோயாளிகளாகவும் செயல் புரியும் தன்மையிழந்தவர்களாகவும் ஆகிவிடுகின்றனர். இவற்றுக் கெல்லாம் காரணம் அவர்கள் அறிவுகெட்ட தனமாய்ப் பன்றி யிறைச்சியைப் புசிப்பதே யாகும்.

இந்தக் கொடிய வியாதிக்கு எப்படிப்பட்ட தேகாரோக்கிய மிக்க பலாட்டியனும் ஆளாகாமல் இருக்க முடியாது. அல்லது இந்த வியாதிக்கு மருந்தும் கிடையாது. கிருமி நாசினிகளான ஊசி மருந்துகளோ, அல்லது காரசாரமான வேறு மருந்துகளோ, அல்லது தடுப்பு ஊசிகளோ இந்தக் கொடிய பொல்லாத கிருமியைக் கொல்லவோ வெல்லவோ முடியா. பன்றி யிறைச்சியை உண்ணாமல் தடுத்துக் கொள்வ தொன்று மட்டுமே இவ் வியாதி அணுகாமல் காப்பாற்றிக் கொள்ளும் மிகச்சிறந்த தடுப்பு மார்க்கமாகும்.

முற்றும் வளர்ந்த ட்ரிக்கெனெல்லா கிருமிகள் ஒவ்வொன்றும் சுமார் அரைக்கால் அங்குல நீளமும், ஓர் அங்குலத்தில் 400-இல் 1 பங்கு அகலமும் உள்ளதாகக் காணப்படுகின்றன. இவை எலுமிச்சம்பழம் போன்ற அமைப்புடன் சுருட்டி மடக்கிக் கொண்டு, பன்றி உடற் சதையின் இடுக்குக்களிலுள்ள கட்புலனாகா நுண்ணிய குப்பிகளுக்குள் அடங்கிக் கிடந்து 40 வருடங்கள் வரையில் கூட ஜீவித்திருக்கின்றன. எனவே, எந்தப் பன்றிக்கு இந்தக் கிருமி உண்டு, எதற்கு இல்லையென்று எவராலும் கண்டுபிடிப்ப தென்பது அறவே இயலாது.

இந்தக் கிருமியுள்ள பன்றியிறைச்சியை ஒருவன் புசித்தவுடனே இவை அவனுடைய குடலுக்குள் சென்று நன்றாய் ஜீரணமாகி விட்டபோதினும், மிகப் பொல்லாத சாசுவத சக்திமிக்க இக் கிருமியின் ஜீவதாது மட்டும் மாளாமல் உயிருடனேயே இருந்து, குடலுக்குள்ளேயே மீண்டும் உயிர்பெற்று, முழு அளவுக்கும் வளர்ந்து, ஒவ்வொன்றும் 1500 சந்ததிகளை உற்பத்தி செய்து விடும் அபார சக்தியைப் பெற்றுக்கொண்டு விடுகிறது. ஒருவன் பன்றியிறைச்சியிலுள்ள ஒரு கிருமியைப் புசித்து ஒன்று அல்லது மூன்று வாரத்துக்குள் அவனுடைய உதிரத்துக்குள் அது பலவாகப் பெருகிக் கலந்து விடுகின்றது. இந்தக் கிருமி மனித உடலின் எந்த உறுப்புக்குள்ளும் படையெடுத்துச் செல்லக் கூடியதா யிருக்கின்றமையால், இக் கிருமியால் பாதிக்கப்பட்டவன் என்ன மாதிரியான வியாதிக்கு உள்ளாகிறான் என்பதைக் கண்டு பிடிக்க முடிவதில்லை. இந்தக் கிருமி புகுந்த மனிதவுடலில் சுமார் 50 தினுசான வெவ்வேறு விதப்பட்ட மாகொடிய வியாதிகளுக்குண்டான அறிகுறிகள் தோற்ற மளிக்கின்றன. எனவே, இன்ன வியாதியால் இவன் பீடிக்கப்பட்டிருக்கிறானென்று கண்டு பிடித்துத் தக்க சிகிச்சை புரிவ தென்பது டாக்டர்களால் இயலாமற் போய்விடுகிறது.

பன்றியிறைச்சியைச் சாதாரணமாக உப்பிட்டுப் பாடம் பண்ணுவதாலோ, அல்லது புகைபிடித்துப் பாடம் பண்ணுவதாலோ அதிலுள்ள இந்தக் கிருமிகளைக் கொன்றுவிட முடிவதில்லை. அல்லது அரசாங்கமே ஏற்பாடு எடுத்து, பன்றி யிறைச்சிகளை டின்களில் அடைக்கிற தொழிற்சாலைகளில் விஞ்ஞான நிபுணர்களை மேற்பார்வைக்கு அமர்த்திவைத்தபோதினும், எந்த இறைச்சித் துண்டில் கிருமியிருக்கிறது, எந்தத் துண்டில் அஃது இல்லையென்பதைத் துருவிக் கண்டுபிடிப்ப தென்பது அறவே இயலாமற் போய்விடும்.

—"இஸ்லாமிக் ரெவியூ"வி லிருந்து.



சுவாமி விவேகானந்தா சிக்காகோ நகரில் ஹிந்துமதச் சார்பாகச் சென்று பிரசங்கம் புரிந்து, அமெரிக்காவிலே ஹிந்து வேதாந்த தத்துவத்தின்மீது பற்றுதல் ஏற்படச் செய்தார். அந்தக் கூட்டத்துக்கு இஸ்லாத்தின் சார்பாகச் சென்றிருந்தவர்கள் யார், தெரியுமா?

# இஸ்லாத்தின் பிரதிநிதிகள் இரண்டு ராமர்கள்

இற்றைக்குச் சரியாக அறுபதாண்டுகட்கு முன்னே, 1893-ஆம் ஆண்டிலே வட அமெரிக்க பிரதான நகராகிய சிக்காகோ பட்டணத்திலே ஓர் உலகமத மகாநாடு "மதங்களின் பார்லிமெண்ட்" என்ற பெயரிலே நடத்துவிக்கப்பட்டது. அந்த அகில உலக சர்வமத மகாநாட்டிலே ஒவ்வொரு மதத்தின் சிறப்புக்களையும் குணவிசேஷங்களையும் நற்பண்புகளையும் பற்றி விளக்கமான பிரசங்கங்கள் புரிவதற்காக அவ்வம் மதத்தைச் சார்ந்த நிபுணர்கள் வரவழைக்கப்பட்டனர். அங்குச் சென்ற பிரதிநிதிகள் தங்கள் தங்கள் மதம் எப்படி மற்றமற்ற மதத்தினும் மேம்பட்டதாக விளங்குகிற தென்பதை எடுத்துக் காட்ட அருமையான சந்தர்ப்பம் வாய்க்கப் பெற்றமையால், இந்தக் கிடைத்தற்கரிய அபூர்வமான தருணத்தை மிக நன்றாய்ப் பயன்படுத்திக்கொண்டு, தாங்கள் கற்ற வித்தைகளை அழகான கைவரிசையுடன் அள்ளிப் பொழிந்தனர். அவ்வம் மதத்தின் சார்பாகத் தேர்ந்தெடுத் தனுப்பப்பட்ட அந்தப் பிரதிநிதிகள் மிகவும் சாமர்த்தியமும், பேச்சு வன்மையும் மிக்கவர்களா யிருந்தமையால், தங்கள் மதங்களிலுள்ள குறைபாடுகளைச் சாதுரியமாய் மறைத்து, அல்லது அவற்றை நிறைபாடுகளைப்போல் மாற்று மெருகு கொடுத்து வாக்குச் சாதுரியமாகப் பேசித் தீர்த்தார்கள்.

இப்படிப்பட்ட சகலமதப் பிரதிநிதிகளுள் ஒருவராய் விளங்கியவரே ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸரின் சீடராகிய ஹிந்து வேதாந்தி சுவாமி விவேகானந்தா என்பவ ராவார். இவர் ஹிந்து வேதாந்த தத்துவார்த்தத் துறைகளைப்பற்றி எவ்வளவு கெட்டிக்காரத் தனமாகப் புதுமெருகு கொடுத்து மிக அழகாக ஹிந்து மதத்தை அம் மகாநாட்டில் வருணித்தா ரென்றால், அதுவரை ஹிந்துமதமென்றாலே இன்னதென்றுகூடக் கொஞ்சமும் உணராத அமெரிக்கர்கள் அதைத் தெரிந்து கொண்டதுடன், "இவ்வளவு அபூர்வமான அழகிய சித்தாந்தங் கொண்டதா ஹிந்துமதம்? ஆஹா, என்ன நேர்த்தி! என்ன நேர்த்தி!" என்று வானளாவப் புகழ்ந்து மெச்சிப் பாராட்டத் துணிந்துவிட்டார்கள். இன்றுங்கூட இந்த விவேகானந்தா என்னும் தத்துவ ஞானியின் சிக்காகோப் பிரசங்கங்கள் புத்தக ரூபமாக அச்சிடப்பட்டு, அமெரிக்கர்களாலும், மற்றும் பல மேனாட்டினர்களாலும், நம்நாட்டு ஹிந்துக்களாலும் ஆழ்ந்த பக்தியுடன் படிக்கப்படுகின்றன. அந்த உலகமத மகாநாட்டில் இவர் புரிந்த ஹிந்து வேதாந்த தத்துவப் பிரசங்கங்களே மற்றெல்லா மதப் பிரதிநிதிகளும் தத்தம் மதங்களைப்பற்றிப் புரிந்த பிரசங்கங்களுள்ளும் தலைசிறந்த அபூர்வமான முதல் நம்பர்ப் பிரசங்கங்களாகுமென்று மெச்சிப் பாராட்டப் பட்டு வருகின்றன.

உண்மையும் அதுதான். ஏனென்றால், மற்ற மதங்களின் சார்பாகச் சென்ற எல்லாப் பிரதிநிதிகளையும்விட ஹிந்துமதச் சார்பாகப் போன சுவாமி விவேகானந்தாவே வாக்குவன்மையுடையவராகவும், கேட்போருள்ளத்தை வசீகரிக்கத்தக்க பெற்றியுடையவராகவும் காணப்பட்டார். எனவே, "பொய்யுடையொருவன் சொல்வன்மையினால் மெய்போலும்மே மெய்போலும்மே; மெய்யுடையொருவன் சொலமாட்டாமையால், பொய்போலும்மே பொய்போலும்மே!" என்ற அதிவீரராமன் கூற்று அந்தச் சிக்காகோ நகரில் கண்கண்ட உண்மையாக உறுதிப்படுத்தப் பட்டுவிட்டது. ஹிந்துமதச் சார்பாக இந்த விவேகானந்தருடன், பிரம்ம சமாஜப் பெரி

யார் பிரதாப் சந்திர மஜூம்தாரும், புரபஸர் மணிலால்என். துவிவேதியும், பி. பி. நகர்க்கரும், வீர்சந் ஏ. காந்தியும் உடன்சேர்ந்தே பிரதிநிதிகளாகச் சென்றிருந்தன ரென்றாலும், அவர்க ளெல்லாரையும் விட விவேகானந்தாவே மிகச் சிறந்த நிபுணராக எல்லோராலும் ஏகோபித்து ஏற்றுக்கொள்ளப்பட்டார். மேலும் இந்த வேதாந்தியின் விஜயத்துக்குப் பால் அமெரிக்க யுனைட்டெட் ஸ்டேட்ஸ்தேசத்திலே ஹிந்துமத வேதாந்த சித்தாந்தத்தின் மீது அமெரிக்கர்களுக்கு எவ்வளவு பற்றுதல் ஏற்பட்டு விட்டதென்றால், அங்கே சுமார் பதினெட்டு வேதாந்த மத்திய ஸ்தலங்கள் (Vedanta Centres) நிலைநிறுத்தப்பட் டிருக்கின்றன. அவற்றில் ராமகிருஷ்ண மிஷனைச் சேர்ந்த மிக மதியூகியான ஹிந்து தத்துவ ஞானிகள் தலைமை வகித்து அடிக்கடி உபதேசங்களும் பிரசங்கங்களும், அழகாகப் புரிகிறார்கள். அந்தப் பிரசங்கங்களைப் பல சர்வகலாசாலைப் புரபஸர்களும், புத்திசாலிகளான மாணாக்கர்களும் தவறாமல் கேட்டு வருகிறார்கள்.

மெய்யாகவே, ஹிந்துக்கள் சுவாமி விவேகானந்தாவுக்கு நிரம்பவும் கடமைப்பட்டவர்களாகவே இருந்துவருகின்றனர்.

## ஆனால், இஸ்லாமோ ?

அந்தப் பெரிய உலக மத மகாநாட்டுக்கு இஸ்லாத்தின் சார்பாக எந்தப் பிரதிநிதியும் அழைக்கப்படவில்லையா? அப்படி அழைக்கப் பட்டிருந்தால் அவர் அங்கே சென்று என்ன சாதித்தார்? ஷிர்க்கான மதம்பற்றிய ஹிந்து வேதாந்தத் தத்துவார்த்தத்துக்கு அமெரிக்கர்களின் சிந்தனையைக் கவர்ந்து ஈர்க்கும் சக்தி சுவாமி விவேகானந்தாவுக்கு இருந்த தென்றால், இஸ்லாத்தின் சார்பாகச் சென்ற பிரதிநிதிக்குத் தௌஹீத் சித்தாந்தத்தின் பக்கல் அவர்களுடைய கவனத்தை ஈர்க்கும் திறமை இல்லாமலா போய்விட்டது? என்றெல்லாம் நீங்கள் சர்மாரியாகக் கேள்விகளை விடுக்கலாம். ஆம். இஸ்லாத்தின் சார்பாக— உலகம் புகழும் உன்னத, ஏகத்துவ, ஏக சகோதரத்துவ, ஏகாக்ர சக்தி படைத்த இணையற்ற இஸ்லாத்தின் சார்பாக ஒரு பிரதிநிதி அனுப்பப்பட்டே யிருந்தார்; அவர் துருக்கி நாட்டில் வசித்துவந்த, அப்போது தான் சமீபத்தில் இஸ்லாத்தைத் தழுவிக் கொண்டிருந்த நவ்முஸ்லிம் மிஸ்டர் அலெக்ஸாண்டர் வெப் என்பவ ராவார். அவருக்கே அப்போது இஸ்லாத்தைப் பற்றிய முழு விவரமும் தெரியாது. மேலும் பேசக்கூடிய வாக்குச் சாதுரிய மில்லாதவர். பேசுகிற பேச்சுக்களும் திக்கித் திக்கித் தெற்றுவாயன் பேசுவதுபோன் றிருக்கும்; அப்படிப்பட்ட ஒருவர் இஸ்லாத்தைப்பற்றி ஒழுங்காகப் பிரசங்கம் புரியாமற் போய் விட்டபடியால், அந்த உலக மத மகாநாட்டில் இஸ்லாத்தைப்பற்றி எவ்வளவு மகத்தான கவர்ச்சி உண்டு பண்ணப்பட் டிருக்க வேண்டுமோ, அவ்வளவு மகத்தான கவர்ச்சி உதயமாகாமலே போய்விட்டது. எனவேதான், இஸ்லாமிய சித்தாந்தத்தின்மீது அந்த அமெரிக்கர்களுக்கு மோகத்தை மூட்டிவிட முடியாமற் போய்விட்டது. இஸ்லாத்தின் இனிய கோட்பாடுகளைப் பற்றி மிகவும் சரியாய்த் தெரிந்து கொள்ள வேண்டுமென்று தவியாய்த் தவித்து நின்ற அமெரிக்கர்களுக்கு அந்த அபூர்வமான சந்தர்ப்பத்தை நன்கு பயன்படுத்தி வெற்றியை நிலைநாட்டுவதற்கு அந்தத் துருக்கி நவ் முஸ்லிம் பிரதிநிதி அநியாயமாய்த் தவறிவிட்டார். அவர் தவறு செய்து விட்டமையாலேயே, அவரைவிட அழகாகவும் வசீகரமாகவும் தம் நாவன்மையைக் காண்பித்த விவேகானந்தர் சுலபமாக வெற்றி பெற்றுவிட்டார் என்பது மிகையாகமாட்டாது.

## இந்திய முஸ்லிம் பிரதிநிதிகள்

ஆனால், அந்த உலகமத மகாநாட்டுக்கு இந்த இந்தியா தேசத்தின் எந்தப் பகுதியிலிருந்தும் (இப்போதைய பாக்கிஸ்தானின் வட்டாரத்திலிருந்துங் கூட) ஒரே ஒரு முஸ்லிம் பிரதிநிதி கூடப் போகவில்லை. எனினும், அந்தக் காலத்தில் இந்தியாவின் மேற்குப் பகுதி வட்டாரத்திலிருந்து இரண்டு 'பெரிய' மனிதர்கள் வர்த்தக விஷயமாகவோ, அல்லது வேறு சொந்த ஜோலியாகவோ அமெரிக்காவுக்குச் சென்றிருந்தார்கள். அவர்கள் பெரிய பணக்காரர்கள் சிற்றரசு அல்லது ஜமீன்தாரி குலத்தைச் சேர்ந்த பெருமக்களாவர். அவர்கள் இந்தியாவைவிட்டு வெகு தூரத்திலுள்ள அமெரிக்காவுக்கு விஜயஞ் செய்திருந்த போதினும், தாய் நாட்டுப் பற்றின் காரணமாக இந் நாட்டு நாகரிகப் படியே உடை உடுத்திருந்தார்கள். தலையில் அழகான மடிப்புடன் கூடிய உயர் ரகப் பட்டுத் தலைப்பாகைகள் பொருத்தப்பட் டிருந்தன. அவற்றின் நீண்டு தொங்கும் மடிப்புக் கலையாத தோகைவால்கள் பார்க்கக் கம்பீரமாயிருந்தன. நீண்ட ஷேர்வானி உடுத்திருந்தார்கள். அந்த ஷேர்வானிகளும் படாடோபமாகவும், உயர்ரகப் பட்டாலானவை யாகவும் மின்னிக்கொண் டிருந்தன. கால்களில் ராஜபுத்திர பாஷனில், மொகல் வேலைப்பாடுகளுடன் கூடிய 'ஜூத்தா'க்களைப் போட்டிருந்தனர். அவர்கள் வேடிக்கை பார்ப்பதற்காக அந்தச் சிக்காகோ நகருக்கு விஜயஞ் செய்தார்கள். அப்போது அங்கே உலக மத மகாநாடு கூடுகிற தென்பதை அவர்கள் கேள்வியுற்றவுடனே அந்தக் கூட்டத்துக்கும் வேடிக்கை பார்க்கச் சென்றார்கள்.

சிக்காகோவில் மகா நாட்டை நடத்தி வைத்த வரவேற்புக் கமிட்டிக்காரர்கள் அந்த இரண்டு 'பெரிய' மனிதர்களையும் பார்த்தார்கள். இதற்கு முன்னே அந்தக் கமிட்டியார்கள் இந்திய முஸ்லிம்களை நேரில் பார்த்ததில்லை. ஆனால், பத்திரிகைகளில் வரும் வருணனைகளைப் படித்தும், சமயத்தில் வெளியிடப்படும் இந்திய முஸ்லிம் பிரபலஸ்தர்களின் போட்டோப் படங்களைப் பார்த்துமே, இந்திய முஸ்லிம்கள் எப்படித் தோற்ற மளிப்பார்கள் என்பதை அந்த அமெரிக்கர்கள் மானஸமாகக் கற்பனை செய்து வைத்திருந்தார்கள். அந்தக் கற்பனை உருவங்களை முற்ற முற்ற நிகர்த்த வண்ணம் அவ்விரு இந்திய 'பெரிய' மனிதர்களும் காட்சியளித்தபடியால். வரவேற்புக் கமிட்டிக் குழுவினர்கள் அவ்விருவரையும் 'இந்திய முஸ்லிம்களின் பிரதிநிதிகள்'போலும் என்று எண்ணிக் கொண்டனர்.

அப்படித் தவறாக யூகித்துக் கொண்டதுடன் நில்லாது, அந்த இரண்டு பேர்வழிகளையும் பெருங் குதூகலத்துடன் கைகுலுக்கி நல்வரவேற்று, மகாநாட்டு மேடைக்கே மரியாதையாக அழைத்துச் சென்று, அம்மேடைமீது பிரதிநிதிகளுக்காக ஒதுக்கப்பட்டிருந்த நாற்காலிகளில் அமர்த்திவிட்டார்கள். மகாநாட்டுக்கு எந்த எந்த நாட்டிலிருந்து எந்த எந்த மதத்தின் சார்பாக யார் யார் பிரதிநிதியாக வந்தார் என்று குறித்துக் கொள்ளும் மகாநாட்டுக் காரியதரிசி பொதுவாக அவ்விருவரிடையேயும் சென்று, மந்தணமான தொனியில், "உங்கள் பெயர் என்ன?" என்று அவ்விருவரையும் வினவினர். அதற்கு ஒருவர், "என் பெயர் ஸித்து ராம்," என்றார். மற்றொருவர், "என் பெயர் (z)ஜிந்தா ராம்!" என்று சொன்னார். அவர்கள் எந்த நாட்டிலிருந்து; எந்த மதத்தின சார்பான பிரதிநிதிகளாக இங்கே விஜயஞ் செய்திருக்கிறார்களென்னும் கேள்வியை அந்த ஸெக்ரடரி (மகாநாட்டுக் காரியதரிசி) வினவவே இல்லை. உடைகளைப் பார்த்தால்தான் அவர்கள் இந்தியாவிலிருந்து வந்தவர்களென்பது உள்ளங்கை நெல்லிக்கனிபோல் விளங்குகிறதே! அவர்களுடைய படாடோப கம்பீரத்தைப் பார்த்தால் தான் இந்திய நவாப் ஸாஹிப்களின் வம்சத்திலுதித்தவர்களைப்போல் கண்ணுக்கு மெய்யாகத் தெரிகிறதே! எனவே, அனாவசியமான கேள்வியைக் கேட்க விரும்பாத அந்த வரவேற்புக் கமிட்டிக் காரியதரிசி தம்முடைய கையில் பிடித்திருந்த ஜாப்தா காகிதத்தில், "ஸித்து ராம், ஜிந்தா ராம்—இந்திய முஸ்லிம்களின் பிரதிநிதிகள்—முஸ்லிம்கள்" என்று தாமாகவே வரைந்து கொண்டுவிட்டார்.

இங்ஙனமாக, இந்தியாவிலிருந்து எந்த முஸ்லிம் பிரதிநிதியும் அந்த உலக மத மகாநாட்டுக்கு விஜயஞ் செய்யாதிருக்க, மகாநாட்டுக்காரர்கள் தாங்களாகவே தவறாக யூகம் செய்துகொண்டதன் விளைவாக, 1893 உலக மத மகாநாட்டுத் தஸ்தாவீஜ்களில் ஸித்து ராம் என்பவரும் ஜிந்தாராம் என்பவரும் இந்திய முஸ்லிம் பிரதிநிதிகளாய் வந்திருந்தார்கள் என்னும் தவறான விவரம் பொறிக்கப்பட்டுவிட்டது. 'ராம்' என்கிற நாமம் எந்த மதத்தைக் குறிக்கும் பெயரென்பது அந்தக் காலத்து அமெரிக்கர்களுக்குத் தெரியாதகையால், ஸித்துராம் என்பதும் ஜிந்தாராம் என்பதும் இந்திய முஸ்லிம்கள் வைத்துக்கொள்ளும் இருவகைப் பெயர்கள் போலும் என்று அதிகப் பிரசங்கித்தனமாக நினைத்துக் கொண்டார்கள். அதன் விளைவாக, நெடுநாள் வரையில் அமெரிக்கர்கள் ஸித்து ராம் என்பவரையும் ஜிந்தா ராம் என்பவரையும் முஸ்லிம்க ளென்றே நம்பிவிட்டனர்.

மகாநாட்டில் இஸ்லாத்தைப்பற்றி முற்சொன்ன நவ்முஸ்லிம் அலெக்ஸாண்டர் வெப் என்பவர் திக்கித் திக்கிச் சில சாரமற்ற பேச்சுக்களைப் பேசியபோது, அந்த ஸித்து ராம் என்பவரும் ஜிந்தா ராம் என்பவரும் தங்கள் படாடோப ஆர்ப்பாட்ட மிக்க தலைப்பாகைகளின் தோகை வால்களை இப்பக்கமும் அப்பக்கமும் அலங்காரமாக ஆட்டியசைத்துக் கொண்டும், அவற்றின் மடிப்புக் கலையாமல் அவற்றை லலிதமாகவும் நாஜூக்காகவும் தடவிவிட்டுக் கொண்டும் 'ஆடுதன்ராஜா'க்களைப்போல் மேடைமீது வீற்றிருந்தனர். அவர்களுக்கு இஸ்லாத்தைப் பற்றியும் ஒன்றுந் தெரியாது; அவர்கள் முஸ்லிம்களும்

அல்லர். எனவே, அவர்கள் வாய்மூடிமௌனி யாக வீற்றிருந்து வேடிக்கை பார்த்தார்கள். தங்களுடைய உயர்குல அந்தஸ்தைக் கருதியே மகாநாட்டினர் இப்படியெல்லாம் மேடைமீது ஏற்றி மரியாதை கொடுத்தனர் போலும் என்றுதான் அந்த இரு ராமர்களும் நினைத்துக் கொண்டார்களே யொழிய, தங்களிருவரையும் இந்திய முஸ்லிம்களின் பிரதிநிதிகளென்று மகாநாட்டினர் தவறாக நினைத்துக் கொண்ட மையாலெழுந்த விபரீதம் இதுவென்பதை அவர்கள் உணரவில்லை.

இங்ஙனமாக, அம்மகா நாட்டில் இஸ்லாத்தின் பிரதிநிதிகள் இரண்டு ராமர்களாக விளங்கினர்கள் !

## காலம் மாறிவிட்டது !

இவையெல்லாம் அறுபது வருஷங்களுக்கு முன்—ரேடியோ இல்லாத, டெலிவிஷன் இல்லாத, டெலிபோன் இல்லாத, விமான மில்லாத, மற்றப் பலவித நவீன சாதனங்களில்லாத அந்தக் காலத்தில் நிகழ்ந்த பரிதாபகரமான விபரீத நிகழ்ச்சிகளாகும். யார் மீதும் குற்றம் சொல்வதற்கில்லை; காலத்தின் கோலமும் முஸ்லிம்களின் அக்கிரமமான அசிரத்தையும் அப்படிப்பட்ட கோமாளித்தனத்தை உற்பத்தி செய்துவிட்டன. ஆனால், அந்த "மதங்களின் பார்லிமெண்ட்" டென்னும் உலக மத மகாநாட்டிலே இஸ்லாத்தின் இனிய தன்மைகளை நனிவிளக்கிவைக்காம் அனைவரும் தவறிவிட்டோ மெனினும், மேனாட்டினர் பின்னும் பிறகு இஸ்லாத்தைப் பற்றிப் படிக்கவும் ஆராய்ச்சி செய்யவும் துணிந்ததற்கப்பால், அவர்கள் இப்போது இவ்வுலகின்மிகச்சிறந்த மதம் இஸ்லாமேதான என்பதை ஐயமறத் தெளிந்துகொண்டுவிட்டனர். கெத்தே, கார்லைல், லேன்பூல், ஜார்ஜ் பெர்னட்ஷா முதலிய அறிஞர்கள் இஸ்லாத்தின் மேன்மை பற்றிக் கூறியிருக்கும் கூற்றுக்களை இப்பால் படித்துத் தெரிந்து நல்ஞானம் பெற்றுக்கொண்டனர். எனவே நியூஜெர்ஸீ என்னும் அமெரிக்க நாட்டு மாகாணத்திலுள்ள பிரின்ஸ்டன் பல்கலைக் கழகத்திலும், வாஷிங்டனிலுள்ள லைப்ரரி ஆப் காங்கிரஸ் என்றும் ஸ்தாபனத்திலும் அடுத்துவரும் செப்டம்பர் மாதம் 17-ஆம் தேதி முதல் 19-ஆம் தேதி வரை "இஸ்லாமிய கலாசாரமும் இன்றைய உலகத்துடன் அதற்குள்ள தொடர்பும்" என்னும் மகத்தான விஷயங் குறித்துப் பிரமாதமான பிரத்தியேகப் பெருங்கூட்ட மகாநாடு கூட்டுவதென்று அந்த அமெரிக்கர்கள் முடிவு செய்திருப்பதாகப் பத்திரிகைச் செய்திகள் அறிவிக்கின்றன. 1953, ஸெப்டம்பர் 17, 18 தேதிகளில் அந்த மகாநாடு பிரின்ஸ்டன் பல்கலைக் கழகத்தில் நடைபெறுமென்றும் 17, 18, 19 தேதிகளில் காங்கிரஸ் லைப்ரெரிக்கூட்டம் நடைபெறுமென்றும் தெரியவருகிறது. அந்தப் பல்கலைக்கழகமும், லைப்ரெரியும் சேர்ந்து விடுத்திருக்கும் கூட்டறிக்கையில், "இஸ்லாமிய நாகரிகத்தின் கலாசார அடிப்படைகளும் இஸ்லாமிய வாழ்வின் ஆத்மிக, விவேகத் துறைகளும் மனித இனத்துக்கு எப்படி இணையற்ற நல்வழிகாட்டிகளாகத் திகழ்கின்றன வென்பதை யுனைட்டெட் ஸ்டேட்ஸில் வாழும் அமெரிக்கர்கள் இன்னமும் நன்ருய்த் தெரிந்து புரிந்துகொள்ளவேண்டுமென்பதன் அவசியத்தை நாங்கள் உணர்ந்தமையாலேயே இந்த மகாநாட்டைக் கூட்டுவது என்று தீர்மானித்திருக்கிறோம். இன்றைய உலக முன்னேற்றத்துக்கு இஸ்லாத்தின் விசேஷமான குறிப்பிடத்தக்க உயரிய பண்புகள் எங்ஙனம் அத்தியாவசியமாய்த் தேவைப்படுகின்றன வென்பதை இந்த யுனைட்டெட் ஸ்டேட்ஸ் தேசம் இப்போதுள்ளதைவிட மிகநன்ருகவும் அதிகமாகவும் விளங்கிக்கொண்டுவிடுமேயானால், அதனால் ஏற்படும் விளைவாக, இஸ்லாத்தைப் பற்றிய ஆராய்ச்சிகளை நடத்தவும், அவற்றை நன்கு பயிலவும் தேவைப்படும் புதிய வழிவகைகளை ஆரம்பித்து வைக்கவும் வழிபிறக்குமென்று எதிர்பார்க்கிறோம்," என்று குறிப்பிட்டுள்ளன.

அந்த மகாநாட்டிலே கீழ்க்கண்ட மூன்று துறைகளும் விவாதிக்கப்படுமென்றும், கட்டுரைத் தொகுதிகள் வெளியிடப் படுமென்றும் கூறுகிறார்கள்:—

(1) இஸ்லாமிய கலாசாரங்கள்சம்பந்தமான முதற்தரமான உன்னத கிரந்தங்கள்.

(2) இஸ்லாமிய சட்டம், சமூகம்.

(3) இன்றைய உலகிலே இஸ்லாத்தில் காணப்படும் விவேகமும் ஆத்மிகமும் சம்பந்தமான இயக்கங்கள்.

அறுபது வருடத்துக்கு முன் சிக்காகோ நகருக்கு விந்துராமும், ஜிந்தாராமும் சென்றதுபோல் இப்போது நடந்துவிடாமல் இருப்பதற்காக, இந்த மகாநாட்டுக்குத் தகுதி வாய்ந்த பிரதிநிதிகளை அனுப்பிவைக்கும்படி எகிப்து, இந்தியா, இந்தோனேஷியா, ஈரான், இராக், ஜோர்தான், லெபனன், மலாயா, பாக்கிஸ்தான், ஸஊதி அரேபியா, ஸிரியா, துருக்கி, எமன் ஆகிய பதின்மூன்று நாடுகளுக்கும் அந்த மகாநாட்டுக் கமிட்டியினர் அழைப்பு அனுப்பி யிருக்கிறனர். இந்தப் பதின்மூன்றுநாட்டுப் பிரதிநிதிகளும் அடுத்த மாதம் அங்கே சென்று, சென்ற அறுபது வருஷங்களுக்குமுன் அலெக்ஸாண்டர் வெப் என்னும் நவ முஸ்லிம் செய்யத் தவறிவிட்ட காரியத்தை வெற்றிகரமாய்ச்செய்துமுடித்து, கிறிஸ்தவப் பாதிரிமார்கள் இஸ்லாத்தின்மீது அக்கிரமமாய்ச் சுமத்திவைத்திருக்கும் பொய்யான குற்றச்சாட்டுக்களை அம்பலப்படுத்தி, உலகமக்களை உய்விக்கவென்று ஒரே ஒரு சிறந்த இணையற்ற மார்க்கம் இவ்வவனியிலிருக்கிறதென்றால், அஃது இஸ்லாமேதான் என்பதை இனிது விளக்கிக் காண்பித்து, இவ்வுலகத்திலாகட்டும் வரப்போகிற அவ்வுலகத்திலாகட்டும் இந்த இயற்கை மதமான இஸ்லாம் மட்டுமேதான் இனிமையான சாந்தியை நல்கக்கூடிய உண்மை மதமாகக் காணப்பட்டு வருகிறது என்பதை அழகுபெற எடுத்துப்போதித்து, மனிதனைப் பிறந்தவன் இஸ்லாத்தைத் தவிர வேறுமதத்தை எடுத்துப் பின்பற்றி இலேசில் இறைவனின் பிரீதியை எங்ஙனம் பெற்றுக்கொள்ளமுடியாதென்பதை நன்கு நிரூபித்து, மற்றெல்லா மதங்களையுங் காட்டில் இந்த அபூர்வமான மார்க்கம் எப்படி ஒவ்வொரு துறையிலும், ஒவ்வொரு கலையிலும், ஒவ்வொரு படியிலும், மேம்பட்டதாகவும், ஒப்புவமையற்றதாகவும் விளங்கிவருகிறதென்பதை விவரித்துக்காண்பித்து, குர்ஆன் மட்டுமே மற்ற எந்த வேதத்தையும்விட, இதிகாசத்தையும்விட, அசல் உருவம் அரை மயிரிழையும் பிறழாது எங்ஙனம் 14 நூற்றாண்டுகளாக அப்படியேஅன்றுபோல் இன்றும்அப்பட்டமா யிருந்து வருகிறதென்பதை ஆதாரபூர்வமாய் எடுத்துக்காண்பித்து மாபெரும் வெற்றியை வேரூன்றி நிற்கச் செய்வார்களென்று உலக முஸ்லிம்கள் யாவரும் அதியாவலுடன் எதிர்பார்த்து நிற்கின்றனர்.

சென்ற அறுபது ஆண்டுகட்கு முன்பு ஆங்கில மொழியில் காணப்பட்ட முஸ்லிம் இலக்கியத்தைவிட, இந்தக் காலத்திலே மிக அதிகமான முஸ்லிம் இலக்கியங்கள் காணப்படுகின்றன. ஸையித் அமீர் அலீ, காஜா கமாலுத்தீன், மௌலானா முஹம்மதலீ, அல்லாமா யூசுப் அலீ, மர்மடியூக் பிக்தால், ஸிப், மிர்ஜா குலாம் அஹ்மத் (இவரெழுதியுள்ள இஸ்லாத்தின் தத்துவங் குறித்த நூல்கள் மட்டுமே எடுக்கப்பட வேண்டுமன்றி, குதர்க்கம் விளைக்கும் 'காதியனி' தக்ரார் நிறைந்த நூல்களைக் கைவிடவேண்டும்), ஸர் அர்னல்டும் கில்லாமும், அப்தாபுத்தீன் அஹ்மத், குலாம் ஸர்வர், யாகூபகான், டட்லீஷைட், லார்டு ஹெட்லீ, பஷீர் பிக்வார்டு, டாக்டர் இக்பால், டாக்டர் மார்க்கஸ், லவ்குரோவ் முதலியவர்கள் ஆங்கில மொழியில் பிரசித்தி பெற்ற விதத்தில் வெளியிட்டிருக்கும் சகல உன்னதமான ஆராய்ச்சி நூல்கள், மொழி பெயர்ப்புக்கள், வியாக்யானங்கள் முதலியன இந்தப் பதின்மூன்று நாட்டுப் பிரதிநிதிகளுக்கும் வேண்டிய விஷய நுணுக்கங்களை மிகத் தாராளமாய்க் கொடுத்துதவத் தக்க நிலையில் இப்போது நாம் இருந்துவருகிறோம். எனவே, அவற்றை அந்தப் பிரதிநிதிகள் கரைத்துக் குடித்து, அழகாய்ச் சுருக்கித் திரட்டி, இணையற்ற இஸ்லாத்தின் மகத்துவத்தை அம்மகா நாட்டில் மாண்புறச் செய்வார்களென்றுநாம் ஆவலுடன் எதிர்பார்க்கிறோம்.

மேலும், ஹஜ்ரத் அப்துல்காதிர் ஜீலானி, முஜத்தித் அல்பீதானி, இமாம் கஜ்ஜாலீ, ரூமீ, ஹாபிஸ், இக்பால் முதலிய பெரிய பெரிய தத்துவ ஞானிகளின் தத்துவ ஆராய்ச்சிகள் தக்க விதமாக அமெரிக்கர்களின் ஞானத்துக்குள்ளே எளிதாகப் புகுத்தப்படல் வேண்டும். பிரதிநிதிகள் இந்தத் துறையிலும் வெற்றியடைவார்களென்றே நம்புகிறோம். இந்தியாவிலும் பாக்கிஸ்தானிலுமுள்ள இஸ்லாமிய தப்லீக் ஸ்தாபனங்கள் அந்தப் பிரதிநிதிகள் அமெரிக்கர்களுக்கு என்ன என்ன புதிய விஷயங்களை எப்படி யெப்படியெல்லாம் பிரசங்கிக்க வேண்டுமென்பதைத் தயார் செய்து கொடுக்குமென்றும் எதிர்பார்க்கிறோம். மூன்று நாட்களுக்குள் பலதிறப்பட்ட பெரிய பெரிய சிந்தனைக்குரிய அரிய விஷயங்களெல்லாம் பேசித் தீர்க்கப்படவேண்டி யிருப்பதால், அந்தப் பிரதிநிதிகள் குன்றக் கூறாமலும், மிகைபடக் கூறாமலும், சொன்னதைத் திருப்பித் திருப்பிச் சொல்லாமலும், மாறு கொளக் கூறாமலும், வழூஉச் சொற் புணர்த்தாமலும், மயங்க வைக்காமலும், வெற்றெனத் தொடுக்காமலும், சொல்ல வந்ததைவிட்டு வேறொன்றைப் பேசி நேரத்தைப் பாழாக்காமலும், ஆரம்பித்த வேகத்தைப் போகப் போகக் கழுதை தேய்ந்து கட்டெறும்பான கதையாக ஆக்காமலும், ஒருவருக்கும் விளங்காத மாதிரியில் படாடோப பயங்கரத்துடன் சொற்பிரயோகஞ் செய்யாமலும், சுருக்கச் சொல்லி, விளங்க வைத்து, கேட்போருக்கு

இனிமைமூட்டி, நல்ல சொற்களைப் பிரயோகித்து, தளைதட்டாத மோனை எதுகையுடன் அழகுறப் பேசி, மிக ஆழமான கருத்துக்களை வெளியிட்டு, முன்னே சொல்ல வேண்டியவற்றை முன்னேயும், பின்னே சொல்லவேண்டியவற்றைப் பின்னேயும் அணிபெற வகுத்து ஓதி, பேசவேண்டிய இலக்கண முறை பிசகாமல் பேசியும், சிறந்த கருத்துக்களை வெளியிட்டும், சுலபமாக விளங்கத் தக்க உபமான உபமேயங்களுடன் எடுத்துப் போதித்தும் தங்கள் கடமைகளை இனிது நிறைவேற்றி முடிப்பரென்று எதிர்பார்க்கிறோம். அவர்கள் பொய்யை மெய்யாக்கிக் காண்பிக்க வேண்டிய தவறான சுமையைச் சுமத்தப்பெற வில்லை; ஆனால், மெய்யை மெய்யென்று எடுத்துக் காண்பிக்கும் சத்தியத் தொண்டினையே ஒப்படைக்கப்பெற் றிருக்கின்றனர். எனவே, அவர்கள் வெற்றிபெறுவ ரென்பதில் எமக்குக் கிஞ்சித்தும் ஐயமில்லை. ஏனென்றால், போகிற பிரதிநிதிகள் ஸித்து ராமு மல்லர்; ஜிந்தாராமும் அல்லர்.

வாஷிங்டனிலுள்ள அழகிய மஸ்ஜிதின் பாங்கு மேடைமீதிருந்து இன்று தினம் ஐந்து வேளையும் முஅஜ்ஜின் அதான் முழக்குகிறார். எத்தனையோ அமெரிக்கர்கள் அந்தத் தலை நகரில் முஸ்லிம்களாக மதம் மாறி வாழ்ந்து வருகிறார்கள். இங்கர்ஸால் என்னும் கயவன் வாழ்ந்த காலத்தில் அமெரிக்கர்களுக்கு இஸ்லாம் என்றால் அவுன்ஸ் என்ன விலை? ராத்தல் என்ன விலை? என்று தெரியாது. ஆனால், இன்று காலம் மாறி விட்டது. இஸ்லாமென்னும் மார்க்கம் இணையற்ற பெரிய மதமென பது எல்லா மேனாட்டினர்க்கும் இப்போது புலனாகிவிட்டது. அல்லது 1893-ஆம் ஆண்டில் ஸித்துராமையும் ஜிந்தாராமையும் இந்திய முஸ்லிம்கள் என்று அமெரிக்கர்கள் கருதினர்களே அப்படிப்பட்ட அறியாமையில் அவர்கள் இன்னமும் மூழ்கியில்லை. சென்ற யுத்தம் முடிந்ததிலிருந்தும், அமெரிக்கா உலக வல்லரசின் சிகரமாக உயர்ந்ததிலிருந்தும், உலகின் பல நாடுகளிலும் அது ஸ்தாபித்திருக்கும் ஸ்தாபனங்களிலிருந்து பெறும் தகவல்களிலிருந்தும், ஐ. நா. சபையை ஏற்படுத்திக் கொண்டதிலிருந்தும் ஜபருல்லா போன்றவர்கள் அடிக்கடி அமெரிக்காவில் புரிந்திருக்கும் இஸ்லாமிய எழுச்சியுள்ள பிரசங்கங்களைக் கேட்டுக்கேட்டுப் பண்பட் டிருப்பதிலிருந்தும், ஸான்பிரான்ஸிஸ்கோவிலுள்ள இஸ்லாமிய பிரசார சபையிலிருந்தும், இன்றைய அமெரிக்கா இஸ்லாத்தைப்பற்றி எவ்வளவோ முற்போக்கான உண்மைகளை நன்குணர்ந்துகொண் டிருக்கிறது. அப்படி ஏற்கெனவே உணர்ந்திருப்பனவற்றை மேலும் நன்றாய்ப் புரிந்துகொள்வதற்காகவும், புரிந்த விஷயங்களை மேலும் விரிவுபடுத்திக் கொள்வதற்காகவுமே இந்த மகாநாடு கூட்டப்பட விருக்கிறது.

ஆண்டவன் இந்த மகாநாட்டின் விளைவாக அமெரிக்காவில் இஸ்லாத்தை ஆழமாய் வேரூன்றப் பெருந்துணை புரிவானென்று ஆவலுடனும் பொறுமையுடனும் எதிர்பார்க்கிறோம்.









# "அன்பு"

தமிழ் நாட்டில் இதுவரை தயாரான எல்லாத் தமிழ்ப் படங்களையும் விட, **நடேஷ் ஆர்ட் பிக்சர்ஸ்** தங்கள் முதன் முயற்சியாக வெளியிட் டிருக்கும் "அன்பு" என்னும் அன்புரசம் ததும்பும் படம் மிக மிக உச்சத்துக்கு உயர்ந்து நிற்கும் மஹோன்னத சிருஷ்டியாகக் காணப்படுவதால், எல்லா ஏழை பணக்கார, ஆண் பெண் மக்களும் தவறாமல் இந்த உன்னதமான கலையோவியத்தை ஒருமுறையேனும் கண்குளிரக் கண்டு மகிழ்தல் அத்தியாவசிய மென்பதை வன்மையாய் ஸிபாரிஷ் செய்கிறோம். ஏனென்றால், இதுவரை நீங்கள் எந்தத் தமிழ்ப் படத்திலும் கண்டறியாத புதுமையான உணர்ச்சிகளை, நவீனமான அமைப்புக்களை, புரட்சிகரமான உன்னதச் சின்னங்களை இதில் கண்டு கொள்வீர்கள். வெறும் புகழ்ச்சிக்காக இவ் வருணனையை நாம் தொடுக்கவில்லை. படத்தைப் பார்ப்பவர்க ளெல்லாரும் இவ் வுண்மையை ஏற்றுத்தான் தீர்வர்.

சிறு வயதில் மாற்றாந்தாயின் சொல்லொணக் கொடுமைகட்குப் பலியான 'தங்கம்' (*T. R. ராஜகுமாரி*) விதி வசத்தால் ராஜமாணிக்கம் என்னும் வயோதிகருக்கு இரண்டாந்தாரமாக வாழ்க்கைப் படுகிறாள். அவ் வயோதிகருக்குச் 'செல்வம்' (*சிவாஜி கணேசன்*) என்னும் மகனும், 'லக்ஷ்மி' யென்றொரு மகளும் உண்டு. அவ் விருவரையும் தங்கம் பெற்ற தாயினும் உற்ற தாயாகப் பேரன்புடன் நேசித்து வருகிறாள். செல்வம் என்ற அந்த அந்த வாலிபன் 'மாலதி' (*பத்மினி*) என்னும் தன்னுடனே பயிலும் மாணவியைக் காதலிக்கிறான். அவர்களுடைய காதல் வளரும் தருணத்தில் மாலதிக்கு அத்தான் முறை கொண்டாடிக் கொண்டு 'திருமலை' (*T. S. பாலையா*) என்னும் கயவன் தோன்றி, மாலதியைச் செல்வம் மணந்து கொள்ளாமல் தான் அடித்துக் கொண்டு போக முயல்கிறான். திருமலை ஏமாற்றமுறுகிறான். மாலதிக்கும் செல்வத்தும் விவாகமாகிறது. கதையின் நடுக்கட்டத்தில் தன் வயோதிகக் கணவனை இழக்கிற தங்கம் இறுதி நிமிஷம் வரை தன் சக்களத்தி மக்களுக்காக இணையற்ற அன்பைச் சொரிந்தே உயிர் நீக்கிறாள். அன்பென்பது அழியாத் திவ்ய மென்பதைக் கதை **உறுதிப்படுத்துகிறது.**

**T. R. ராஜகுமாரி அன்பென்னும் கட்புலனுகாத உயரிய பண்பைக் கண்ணுக்குப் பிரத்தியக்ஷமாகப் படம் நெடுகவும் நடித்து நம் மனத்துள் ஊட்டுகிற இன்பம் நிரந்தரமான உணர்ச்சியை உண்டுபண்ணி விடுகிறது. மாலதி தன் காதலன் செல்வத்தை வீண் அபவாதத்துக்கு உட்படுத்திய கட்டத்தில் சிற்றன்னை தங்கம் செல்வத்துக்கு உபதேசிக்கும் நல்லுபதேசம், தான் பட்டினி கிடந்தாலும் தன் மாற்றுள் மைந்தனைப் போஷிக்கும் கட்டம், தன் நகைகளையெல்லாம் விற்று லக்ஷ்மிக்கு அன்புடன் புரியும் விவாகச் சடங்கு முதலியன மகத்துவமிக்க அபூர்வமான அமைப்புடன் பொருந்தியுள்ளன.**

சிவாஜி கணேசன் நடிப்பில் **புகழ்வாய்ந்தவர். ஆனால், இந்தப் படத்தில் செல்வமென்னும் கதாநாயகனுகத் தோன்றி நடித்துக் காட்டியுள்ள அவருடைய அபூர்வமான நடிப்புக்கள் நவரசங்களையும் அளவுடனும், அழகுடனும் பொழியச் செய்துள்ளன. கல்லூரி நாடகத்தில் அவர் ஷேக்ஸ்பியரின் ஒத்தெல்லோ பாகத்தை நடத்திக் காண்பிப்பது, சிற்றன்னையைப் பெற்ற அன்னையினும் பேரபிமானத்துடன் நேசிப்பது, மாலதியை விரசமில்லாத முறையில் தெய்விகமாய்க் காதலிப்பது, அவள் தன்னை அபவாதத்துக்கு ஆளாக்கியதை அவள் முன்பே நின்று வாதாடி வெல்வது, வேலைதேடி அலைவது, பள்ளிக்கூட மாணவ சேஷ்டை புரிவது ஆகிய ஒவ்வொரு கட்டமும் ஒரு சிறிதும் அப்பழுக்குக் கூற முடியாதபடி வெகு அப்பட்டமாய் அமைந்து, படத்தின் கீர்த்தியைப் பன்மடங்கு உயர்த்தி விட்டன.**

பத்மினியும் இந்தப் படத்தின் **குன்றுப் புகழுக்குத் தம்மை அர்ப்பணித்து விட்டார். நாட்டியத்திலும் நடிப்பிலும் பழகிப்பழகிப் பண்பட்டு வாலிப தசையின் சரியான கட்டத்தையடைந்திருக்கும் கட்டழகு மிக்க இந் நடிகை கார் ஓட்டுவது முதல், செல்வத்தைக் காதலிக்கும் காட்சிகள் முதல், கயவன் திருமலையை ஏமாற்றிக் காலை வாரிவிடுகிறவரை ஒருசிறு அம்சத்திலும் அணுவளவும் பிறழாது, தம் வழமையான கைந்நொடிப்பு, கால் நடிப்பு, கண் சிமிட்டு, புன்முறுவல், விஷமப் பார்வை, வெற்றிநோக்கு முதலியவற்றை மிக மிக அபூர்வமாய் அள்ளிப் பொழிந்திருக்கிறார்.**

கபவனுக வரும் திருமலையின் பாகம் தாங்கிய பாலையாவுக்குப் போதிய சந்தர்ப்பங்கள் கொடுக்கப்படவில்லை யென்ருலும், அவர் தோன்றுகிற ஒவ்வொரு காட்சியும் பெருஞ் சிரிப்பை மூட்டுகின்ற பெற்றிமிக்கதாகப் பொலிகிறது. மாலதியைக் கொள்வதற்குத் தவறிய திருமலை 'ரீடா' (லலிதா) என்னும் நாகரிக மாதை மணந்து படுகிற பாடெல்லாம் வெகு நேர்த்தியாகச் சித்திரிக்கப்பட்டுள்ளன.

நடிகர்களின் அப்பழுக்கற்ற, அருமையான, அளவு மீருத அல்லது அளவுக்குக் குறையாத அழகான கைவரிசைகள் ஒருபுறமிருக்க, நேர்த்தியான, இயற்கையான, ஹாஸ்யமிக்க இனிய, எளிய வசனங்களும், சில அபூர்வமான பாட்டுக்களும், சிறந்த டைரெக்ஷனும் இப் படத்தின் பெருமையைப் பன்மடங்காக மிகைபடுத்திவிட்டன. பார்ப்பவரின் உள்ளத்தைப் பரவசப் படுத்திப் பெருநகைப்பை யூட்டுகிற சம்பாஷணைகளை யொட்டி, எப்படிப் பட்ட கன்னெஞ்சரின் மனத்தையும், உருக்கத்தக்க சோகக் கட்டங்கள் இடையிடையே மிதமான அளவுக்கு மிசிரமாக்கப்பட்டு, கதை கோவை செய்யப்பட்டிருப்பதை எவரும் பாராட்டாமலிருக்க முடியாது. கதை யமைப்பின் கடைசிக்கட்டம் கொஞ்சம் குழப்பத்தை யூட்டி விணே வளர்கிற தென்ருலும், படத்தின் தரம் 'A-1' என்று கூசாமற் கூறலாம்.

N. B. A.

Regd. No. M. 4950 DARUL ISLAM August 1953



Printed by V. Natarajan at Navabharat Press 2/141 Broadway Madras—1
Published by I. Abdur Rahman, at "DARUL ISLAM," 460, Triplicane High Road Madras—5

